20-3

திருமுதுகுன்றம்
அருள்மிகு குமாரதேவ சுவாமிகள் ஆதீனத்தைச் சார்ந்த
அருள்மிகு முத்தையா சுவாமிகள் அருளிய

# சின்மய தீபிகை



திருமுதுகுன்றம் அருள்மிகு குமாரதேவர் ஆதீனம்

19 - 06 - 1997

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்




திருமுதுகுன்றம்
அருள்மிகு குமாரதேவ சுவாமிகள் ஆதீனத்தைச் சார்ந்த

அருள்மிகு முத்தையா சுவாமிகள் அருளிய

# சின்மய தீபிகை

குறிப்புரை:
நல். முருகேச முதலியார்

திருக்கைலாயப் பரம்பரை மெய்க்கண்ட சந்தானம் திருவண்ணாமலை துறையூர் வீரசைவஆதீனத்தைச் சேர்ந்த திருமுதுகுன்றம் அருள்மிகு குமாரதேவர் ஆதீனத்து 23-ஆவது தருமகா சன்னிதானம் சீர்வளர்சீர் கல்யாண சுந்தர சிவப்பிரகாச பரமாசாரிய சுவாமிகள் அவர்களின் அருளாணையின் வண்ணம் இந்த ஆதீனத்திற்குச் சொந்தமான, சென்னை, மயிலாப்பூர் தெற்குமாடவீதியின் எண் 6-ஆம் கட்டிடத்தில் உள்ள அருள்மிகு முத்தையா சுவாமிகள் அருள்மிகு குழந்தைவேல் சுவாமிகள் (குருமூர்த்தங்கள்) திருமடத்தின் ஆலய ஜீரணோத்தாரண நன்னீராட்டு மலராக 19—6—1997 அன்று மலர்கின்றது.

சீர்வளர்சீர் மகாசன்னிதானம் அவர்களின் உத்தரவுபடி
திரு. S. ராசசேகரம் பிள்ளை
ஆதீன கௌரவ நிர்வாகி

# நூல் குறிப்பு

நூல் : சின்மய தீபிகை

ஆசிரியர் : அருள்மிகு முத்தையா சுவாமிகள்

பதிப்பாசிரியர் : முனைவர் சு. தங்கத்துரை

இரண்டாம் பதிப்பு : 19 - 06 - 1997

உரிமை மற்றும் வெளியீட்டோர் : அருள்மிகு குமாரதேவர் ஆதீனம், திருமுதுகுன்றம் - 606 001. (விருத்தாசலம்)

பொருள் : சமய இலக்கியம்

தாள் : 13.7 kg

அளவு : டெம்மி 1/8

எழுத்து : 10 மற்றும் 12 புள்ளிகள்

பக்கங்கள் : 60 + xxxii = 92

விலை : ரூ. 10/-

படிகள் : 1000

அச்சிட்டோர் : கஜேந்திரா அச்சுக்கூடம், 57, தெற்குவீதி, சிதம்பரம்

# பொருளடக்கம்

20-3



திருமுதுகுன்றம் அருள்மிகு ஸ்ரீ குமாரதேவர் ஆதீனம்

20-3



அருள்மிகு ஸ்ரீ முத்தையா சுவாமிகள் அவர்கள்



23ஆவது குருமகா சந்நிதானம்
சீர்வளர்சீர் கல்யாணசுந்தர சிவப்பிரகாச பரமாச்சாரியார்
அவர்கள்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

திருக்கைலாயப் பரம்பரை மெய்க்கண்ட சந்தானம் திருவண்ணாமலை துறையூர் வீரசைவ ஆதீனத்தைச் சேர்ந்த திருமுதுகுன்றம் அருள்மிகு குமாரதேவர் ஆதினம் 23-ஆவது குருமகா சன்னிதானம்

**சீர்வளர்சீர் கல்யாணசுந்தர சிவப்பிரகாச பரமாசாரிய சுவாமிகள் அருளிய**

# ஆசி உரை

அருமறையின் சிரப்பொருளாய் அண்டபகி
ரண்டமுமாய் அமல மோனத்து
ஒரு பொருளாய்ப் பலவிதமாய் உணர்வரிய
பேரொளியின் உண்மையாகும்
பெருவெளிகண்டு ஆனந்தம் பெறுதற்குக்
குருபதத்தைப் பெறுதல் வேண்டி
இருளறவே மலம் விளைக்கும் நெஞ்சை யழைத்து
அறிவுரைத்த இயல்பு சொல்வாம்

*(சின்மய தீபிகை. 1)*

இறைவன் திருவடியை அடைய சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு நிலைகளைச் சைவசித்தாந்தத்தில் காணமுடிகிறது. சிவனடியார்கள் இந்த நான்கு நிலைகளிலும் இறைவனடி சேர்ந்துள்ளார்கள் என்பதற்குப் பெரியபுராணத்தில் குறிப்பிடப்பட்டுள்ள நாயன்மார்கள் வரலாறு தக்க ஆதாரமாகும்.

இறைவன் திருவடியை அடைய மலமாகிய ஆணவம், கன்மம், மாயை தடையாக இருக்கிறது. அந்த மலத்தின் கூறுகளான நான் என்ற அகங்காரம், பணம், புகழ், ஆசை, குடும்ப பந்தம், நிலையாமைச் சிந்தனை போன்றவற்றை அருள்மிகு முத்தையா சுவாமிகள் இந்தச் சின்மய தீபிகை நூலில் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார்கள். இவற்றை குருவருள் மூலம் நீக்கமுடியும் என்பதையும் தெளிவாகக் காட்டியுள்ளார்.

'நான்எனும் ஆணவத்தோடு நாட்கழித்து
நெஞ்சே நீ நலிவுற்றாயே (4-4) என்றும்
கோபுரத்தில் அமைத்து வைத்த பொற்பாவை
கோபுரத்தோள் கொண்டு தாங்கிச்
சோர்வுற்றது எனக்கூறி இருப்பதொக்கும்
நெஞ்சே நீ சொன்ன நீர்மை' (34-1,2) என

கோபுரந்தாங்கி பொம்மை போல உலகை நான் தாங்கிக் கொண்டிருக்கிறேன் என்ற எண்ணத்தையும் மாற்ற வேண்டும் என்கிறார் ஆசிரியர்.

பொய்யாகும் புகழ் மேல் ஆசைதனை ஒழித்திடு எனவும் மண்ணில் ஆசையுற்றால் அதிலே நொந்து மெய்யானது அறியாமல் அலைவாய் எனவும் (24) குறிப்பிடுகின்றார்.

ஈட்டியப்பொருள் எல்லாம் தமக்கு பயன்படாது என்பதை கீழ்வரும் உவமையால் அழகாகக் காட்டியுள்ளார்.

'அனிச்ச மலர் வனந்தோறும் அலைந்து கொடுந்
தேனீக்கள் அருந்தேன் ஈட்டிக்
குனித்த சிலை வேடனுக்குக் கொடுப்பது போல
பொருளீட்டக் குறித்தாய் நெஞ்சே' (29-3,4)

இப்படிப்பட்ட நிலைகளை மாற்ற வேண்டுமானால் குருவருளைப் பெறவேண்டும் என்ற சிந்தனையை நூல் முழுக்கக் காணமுடிகிறது. குருவருள் பெற்றால் திருவருள் கிடைக்கும் என்பதையும் தெளிவுபடுத்தியுள்ளார்.

துரிய நிறைப் பரமகுரு சொல்லிய நன்னிலை
மயக்கில் சொக்கி நாளும்
பிரமமணிச் சுடர் மலையில் கண்ணூன்றிப்
பரம சுகம் பெற்று வாழலாம் (58-1,2)

மேலும் தவநெறியைக் கடைபிடித்தால் இறைநிலையை அடையலாம் (26) என்வும் விளக்கியுள்ளார்.

இவை போன்ற நல்ல அரிய தத்துவங்கள் நிறைந்த சின்மய தீபிகை என்ற இந்த நூலைப் படித்து பயன் பெற்று, குருவருள் பெற்று,

பொய்யுலகந்தனில் அழுந்தி மயக்கமுறார்
　　ஆசைதனில் பொருந்தார் உண்மை
ஐயமுறார் உலகிலுயிர் தன்னுயிர் போல
　　அருள் புரிவார் ஆண்மை சொல்லார்
வையமதில் இருவகைக்கும் வாடார்கள்
　　மகிழார்கள் வாழ்ந்தார் நாளும்
துய்ய பொலின் கமல மலர் எனவொரு சீர்ப்
　　பட்டு நீதம் துலங்குவாரே　　　　(90)

என்ற பாடல் கருத்துபடி வாழ்ந்து காட்டவேண்டும் என எம்பெருமான் அருள்மிகு நடராசப்பெருமான் திருவருளைச் சிந்திக்கிறோம்.

திருமுதுகுன்றம்,
19—6—1997

23-ஆவது குருமகா சன்னிதானம்

உ

சிவமயம்

திருக்கயிலாய பரம்பரைத் திருத்துறையூர்
வீரசைவாதீனம்
22-வது குருமகா சன்னிதானம்
**ஸ்ரீ சுப்ரமணிய சிவப்பிரகாச பண்டார சந்நிதிகள்**
அருளிய

# ஆசி உரை

இவ்வாதீனத்தைச் சார்ந்தவரும் இருபதாவது பட்டம் ஸ்ரீ சொக்கலிங்க சிவப்பிரகாச பண்டார சந்நதிகட்குக் குருவாய் விளங்கியவருமான ஸ்ரீமத் முத்தைய சுவாமிகள் அருளிய அருமை நூலான சின்மய தீபிகை உரையுடன் திருவருட்பாங்கின்படி வெளிவருகிறது.

இந்நூல் ஓதுவோர்களின் பக்தி ஞான வைராக்கியத்தை வளர்த்து ஸ்ரீ குமாரதேவர் திருவாய் மலர்ந்தருளிய சுத்த சாதகத்தையும் மற்றுமுள்ள ஞான நூல்களையும் பயில வழி காட்டும்.

இந்தச் **சின்மய தீபிகைக்கு** அன்புடன் உரையெழுதித் தொண்டு புரிந்த எம் சீடரான திரு. நல். முருகேச முதலியாருக்குச் சிவஞானமும் சிந்திதமனோரத சித்தியும் பெருகுக.

இந்நூலை யாவரும் பயின்று குரு லிங்க சங்கம பக்தியில் சிறந்து விளங்குவார்களாக.

நமசிவாய.

திருமுதுகுன்றம்
6—3—1971

22-ஆவது குருமகா சன்னிதானம்

சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# திருக்கைலாய பரம்பரை, துறையூர் திருமுதுகுன்ற ஆச்சாரியர்கள் பூரணதசையடைந்த தல, திருநட்சத்திரப் பட்டியல்

| எண்: | ஆச்சாரியர்கள் | பரிபூரணதலம் | மாதம் | நட்சத்திரம் |
|---|---|---|---|---|
| | மெய்கண்ட தேவர் | திருவண்ணெய் நல்லூர் | ஐப்பசி | சுவாதி |
| | அருணந்தி சிவாசாரியர் | திருத்துறையூர் | புரட்டாசி | பூரம் |
| | மறைஞான சம்பந்த சிவாசாரியர் | திருக்களாஞ்சேரி | ஆவணி | உத்திரம் |
| | உமாபதி சிவாசாரியர் | கொற்றவன் குடி | சித்திரை | அஸ்தம் |
| | அருள் நமச்சிவாயர் | ,, | மார்கழி | திருவாதிரை |
| | சிவப்பிரகாச சித்தர் | பொதிகை | ஆடி | அசுவனி |
| | நமச்சிவாய தேசிகர் | திருவாவடுதுறை | தை | ,, |
| 1. | சிவப்பிரகாச தேசிகர் | பட்டீச்சுரத்துக்கு அடுத்த வடதளி | ஆனி | பரணி |
| 2. | ஞானக்கூத்த சிவப்பிரகாச தேசிகர் | சிவன் பாக்கம் | மாசி | மகம் |
| 3. | மூலலிங்க சிவப்பிரகாச தேசிகர் | தரணி | பங்குனி | உத்திரம் |
| 4. | சிதம்பர சிவப்பிரகாச தேசிகர் | கொற்றவன் குடி | வைகாசி | திருவாதிரை |
| 5. | குமாரதேவ சிவப்பிரகாச தேசிகர் | திருமுதுகுன்றம் | புரட்டாசி | பூரம் |
| 6. | நமச்சிவாய சிவப்பிரகாச தேசிகர் | பசும்புலூர் | சித்திரை | அஸ்தம் |

| எண்: | ஆச்சாரியர்கள் | பரிபூரண நலம் | மாதம் | நட்சத்திரம் |
|---|---|---|---|---|
| 7. | நன்னூல் சிவப்பிரகாச தேசிகர் | அரியலூர் | வைகாசி | விசாகம் |
| 8. | அருணைச் சிவப்பிரகாச தேசிகர் | திருவண்ணாமலை | ,, | ,, |
| 9. | கருணைச் சிவப்பிரகாச தேசிகர் | ,, | ,, | ,, |
| 10. | பரஞ்சோதி சிவப்பிரகாச தேசிகர் | துறையூர் | ,, | சுவாதி |
| 11. | நல்லநாயக சிவப்பிரகாச தேசிகர் | ,, | தை | பூசம் |
| 12. | சிற்றம்பல சிவப்பிரகாச தேசிகர் | பட்டீச்சுரம் | வைகாசி | மகம் |
| 13. | பொன்னம்பல சிவப்பிரகாச தேசிகர் | ,, | மாசி | மகம் |
| 14. | சிதம்பர சிவப்பிரகாச தேசிகர் | கொற்றவன் குடி | ஆடி | உத்திரம் |
| 15. | கருணைச் சிவப்பிரகாச தேசிகர் | துறையூர் | ஆடி | அசுவனி |
| 16. | நஞ்சுண்ட சிவப்பிரகாச தேசிகர் | ,, | ,, | ,, |
| 17. | குழந்தைவேல் சிவப்பிரகாச தேசிகர் | ,, | ,, | ,, |
| 18. | வைத்திலிங்க சிவப்பிரகாச தேசிகர் | ,, | ஆனி | பரணி |
| 19. | குமார சிவப்பிரகாச தேசிகர் | ,, | மாசி | விசாகம் |
| 20. | சொக்கலிங்க சிவப்பிரகாச தேசிகர் | திருமுதுகுன்றம் | வைகாசி | புரட்டாசி |
| 21. | சிதம்பர சிவப்பிரகாச தேசிகர் | ,, | தை | கிருத்திகை |
| 22. | சுப்ரமண்ய சிவப்பிரகாச தேசிகர் | ,, | மார்கழி | புனர்பூசம் |

சுழற் **P. தர்மசந்த்**
முன்னாள் தலைவர்
சுழற் கழகம், சென்னை துறைமுகம்
துணைத் தலைவர்
தமிழ்நாடு, புதுச்சேரி, அந்தமான்
ஆல் இந்திய குயாமி எக்ட கமிட்டி
நேஷனல் இன்டிகிரேஷன் கமிட்டி

**J.D.P. அசோசியேட்**
238, ராமகிருஷ்ணா மடம் சாலை, மயிலை, சென்னை-4

## அணிந்துரை

மக்கள் வாழ்க்கையில் மேன்மைகளை அடைவதற்கு இன்றி யமையாத வழிகளில் ஒன்று கடவுள் வழிபாடாகும். கடவுள் ஒருவராயிருந்த போதிலும் பத்தர்கள் வழிபட்டு உய்வதற்காக பல வடிவங்கள் எடுத்து மக்களுக்கு அருள் பாலித்து வருகிறார். நம் முன்னோர்கள் இந்த உண்மையை உணர்ந்து ஆங்காங்கே ஆலயங்களை அமைத்து வழிபட்டு வந்தனர்.

ஆதீனங்களும், மடங்களும் இதற்குப் பல வகைகளிலும் உதவி வந்து கொண்டிருக்கின்றன மயிலாப்பூரில் மக்களுக்கு அருள் பாலிக்கும் வண்ணம் இந்தத்திருக்கோயில் அமைக்கப்பட்டது இந்தத்திருக்கோயிலின் திருப்பணிக்கு எங்களையும் ஈடுபடவைத்த ஆதீன 23-ஆவது குருமகா சந்நிதானம் அவர்களுக்கு அன்பை காணிக்கையாக்குகின்றோம்.

இந்தக் கோயிலின் நன்னீராட்டு விழாவின்போது அருள்மிகு முத்தையா சுவாமிகளால் அருளப்பட்ட சின்மய தீபிகை என்ற நூலை விழா மலராக வெளியிடப்படுவதைக் கேட்டு மகிழ்ந்தோம்.

இந்த புத்தகத்தைப் படிப்பவர்களுக்கு பரமனுடைய பரிபூரண அருள் கிடைக்கும் என இறைவனை வேண்டுகிறோம்.

**P. தர்மசந்த்**

டாக்டர். **K.V. குப்புசாமி**
சேர்மென்
ஆர்.வீ.எஸ். குரூப்
கோவை
ரத்தினவேல் சுப்ரமணியம் கல்வி நிலையம்
242, திருச்சி ரோடு, சூளையூர், கோவை
பக்தவச்சலம் மெமோரியல் டிரஸ்ட்
பெரியார் நகர், கொரட்டூர், சென்னை-80

## அணிந்துரை

திருக்கயிலாய பரம்பரை மெய்கண்ட சந்தானம் திருவண்ணாமலை, துறையூர், திருமுதுகுன்றம் வீரசைவ ஆதீன குருமகா சந்நிதானம் சீர்வளர்சீர் கல்யாண சிவப்பாரகாச பரமாச்சாரிய சுவாமிகள் சைவத்துக்கும், தமிழுக்கும், திருமுறைகளுக்கும், சிவவழிபாட்டுக்கும் பெருந் தொண்டு ஆற்றி வருபவர்கள். தில்லையம்பதியில் நடைபெறுவது போல நாளும் ஆறு காலம் நடராசர் பூசை செய்பவர்கள். சிவ பூசை செய்யும் அன்பர்களுக்கு எல்லாவித உதவிகளும் செய்து முக்கிய நாட்களில் ஆன்மார்த்த சிவ பூசை செய்வோர் பலரும் தமது திருமடத்திலேயே விசேட பூசை செய்வதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்பவர்கள் திருமுறைகளை இறைவனின் கட்டளைகளாக ஏற்று வீதியுலா நடத்தும் பாங்கு தனிச் சிறப்புடையது.

அவர்களது திருவுளப் பாங்கின்படி வருகிற 19—6—97 வியாழக்கிழமை சென்னை திருமயிலையில் அருள்மிகு குமாரதேவர் திரு மடத்தில் எழுந்தருளியிருக்கும் அருள்மிகு குழந்தைவேல் சுவாமிகள், அருள்மிகு முத்தையா சுவாமிகள் ஆகிய குருமூர்த்தங்களுக்கு திருக்குடமுழுக்கு நன்னீராட்டுவிழா நடைபெற உள்ளது. ஆன்மீக அன்பர்கள் அனைவரும் குடமுழுக்குப் பெருவிழா கண்டு குருவருளையும் திருவருளையும் பெற்று நன்மைகள் அடையுமாறு வேண்டுகிறேன்.

**K.V. குப்புசாமி**

## சாந்திலால் ப. சோர்டியா

பி.எஸ்., எம்.எஸ்.(யு.எஸ்.ஏ)
கேஸ் வெஸ்டர்ன் ரிசர்வ் பல்கலைக்கழகம்
கிளவ்லேண்ட், ஒஹியோ, யு.எஸ்.ஏ.

பங்குதாரர்
ஜெ.டி.பி. அசோசியேட்
238, ராமகிருஷ்ணா மடம் சாலை
மயிலை, சென்னை-4

நியமன இணைச்செயலர் (1988-89)
ராஜஸ்தான் இளமயர் கழகம், சென்னை பெருநகர்

சென்னை உணவு வங்கி குழுமத்திற்கு சீரிய தொண்டாற்றியதற்காக கோல்டன் ஹார்வெஸ்ட் உரிமம் பெற்றவர்

தலைவர், கலை குழு (1996 - 97)

தலைவர், குழந்தைகள் குழு (புதிய இணைப்பு 1997-98)
மிகச்சிறந்த மெட்ரோனியன் என்பதற்கான பி.எம் துகார் ஞாபகார்த்த உரிமம் பெற்றவர்.

## அணிந்துரை

இறைவனை அடைவதற்கு பல நெறிமுறைகள் இருந்தாலும் பெரியவர்கள் கூறிய வாக்குகள் சிறந்த நெறியாக உள்ளன. அந்த வாக்குகளை எல்லாம் குருபரம்பரையாக காலம்தோறும் உலகில் கலந்து, இன்று நமக்கு புத்தக வடிவங்களில் கிடைத்துள்ளன. அந்த வகையில் அமைந்த அருள்மிகு முத்தையா சுவாமிகளின் சின்மயத் தீபிகை என்ற நூல் இந்தத் திருக்கோயிலின் நன்னீராட்டு விழாவில், வெளிவருவதைக் கண்டு மகிழ்கிறோம். பாடல்பெற்ற இந்தத் தலத்தில் இந்த நூல் வெளியிடப்படுவது பெருமைக்குரிய ஒன்றாகும். எங்களையும் இறைப்பணியில் ஈடுபடச் செய்த திருமுதுகுன்ற அருள்மிகு குமாரதேவ ஆதீன 23ஆவது குருமகா சன்னிதானம் அவர்களுக்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்த அரிய நூலைப்படித்து அதன் சிறப்பை உணர்ந்து நலத்தைப் பேண வேண்டும் என விரும்புகிறோம்.

**P. சாந்திலால்**

அரிமா **J.D. பன்னாலால்**
324 AI மாவட்ட ஆளுனர் (1990-91)
''பன்னாட்டு அரிமா சங்கங்களின்
நல்லெண்ண தூதுவர்'' விருது பெற்றவர்

## அணிந்துரை

ஆதீன குருமகா சன்னிதானங்கள், மக்களின் வாழ்க்கை நெறிகளைப் பொன்மொழிகளாகத் தந்துள்ளனர். அவர்கள் வழியில் சென்றவர்கள் இறைவன் திருவடிகளில் இரண்டறக் கலந்திருக்கின்றார்கள் என்பது வரலாற்று உண்மை.

தொன்மையானதும் வரலாற்றுச் சிறப்பும் கொண்ட மயிலாப்பூரில் அருள்மிகு குமாரதேவர் ஆதீனத்தின் கீழ் உள்ள இந்தத் திருக்கோயில் திருப்பணிப்பணியில் எங்களையும் ஈடுபட வைத்த 23 ஆவது குருமகா சன்னிதானம் அவர்களுக்கு எங்களது நெஞ்சார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்தக் கோயிலின் நன்னீராட்டு விழாவின் போது மக்கள் சிறப்புற்று விளங்க அறிவு மயமாக விளங்க அருள்மிகு முத்தையா சுவாமிகளால் இயற்றப்பட்ட சின்மயதீபிகை என்ற நூலை வெளியிட முன்வந்திருப்பதைக் கண்டு மகிழ்கிறோம்.

இந்த நூலைப்படித்து வாழ்வை ஒளிமயமாக அமைத்துக் கொள்ள இறைவனை வேண்டுகிறோம்.

**J.D. பன்னாலால்**

பேராசிரியர் டாக்டர் அ. ஆனந்தநடராசன்,
தமிழியல் துறைத்தலைவர்,
இந்திய மொழிப்புல முதன்மையர்,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.

## அணிந்துரை

திருமுது குன்றம் வீரசைவ ஆதீனம் குருமகா சந்நிதானம் சீர்வளர்சீர் கல்யாண சிவப்பிரகாச பரமாச்சாரிய சுவாமிகள் நமது தில்லைச் சிற்றம்பலத்தில் நட்டம் பயின்றாடும் கூத்தப் பெருமானை ஆன்மார்த்த மூர்த்தியாகக் கொண்டவர்கள். ஆண்டு தோறும் சிதம்பரத்திற்கு வந்து உமாபதி சிவாச்சாரியார் குருபூஜையை மிகவும் சிறப்பாக நடத்துகிறார்கள். தில்லைவாழ் தீட்சதர் பெருமக்களிடம் மிகுந்த அன்பு கொண்டவர்கள். அவர்களுடைய சீரிய முயற்சியினால் சென்னை-மயிலாப்பூரில் அருள்மிகு குமாரதேவர் மடத்தில் எழுந்தருளியிருக்கும் குருமூர்த்தங்கள் அருள்மிகு குழந்தைவேல் சுவாமிகள், அருள்மிகு முத்தையா சுவாமிகள் ஆகியோர்களின் திருக்கோயில் அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம் 19-6-97 வியாழக்கிழமையன்று (ஈஸ்வர-ஆனி-5) சிறப்பாக நடைபெற உள்ளது.

குடமுழுக்குப் பெருவிழா சிறப்பாக நடைபெறவும், குருமகா சந்நிதானம் நீண்ட ஆயுளும், நிறைவான வளங்களும் பெற்று பன்னெடுங்காலம் இனிதே வாழ தில்லைக் கூத்தன் திருவடிகளை இறைஞ்சுகின்றேன்.

அ. ஆனந்தநடராஜன்

திருச்சிற்றம்பலம்

# பதிப்புரை

திருவும் கல்வியும் சீரும் தழைக்கவும்
கருணை பூக்கவும் தீமையைக் காய்க்கவும்
பருவ மாய்நம துள்ளம் பழுக்கவும்
பெருகு மாழத்துப் பிள்ளையைப் பேணுவாம்.

புண்ணியன் கயிலைக் குரும்பரையிற் போந்த மெய் கண்ட சந்ததியில் வந்த திருமடங்களுள் மிகப் பழைமையானவை திருத்துறையூர் வீரசைவ ஆதீனமும் ஸ்ரீ குமாரதேவர் மடாலய மூமாகும். மிகுசிவ ஞானமும் சித்தியும் பெற்ற குரு பரம்பரையைக் கொண்டது இந்த ஆதீனம். இந்த ஞானபீடத்தில் வந்த குருமகா சந்நிதானங்கள் ஞானநூல்கள் பல இயற்றியும், நெறிதவறாது குருலிங்க சங்கம பக்தியை வளர்த்தும் அனுக்கிரகித்துள்ளார்கள்.

**'சின்மய தீபிகை'** எனும் இந்நூலை அருளியவர் இத்திரு மடத்தைச் சார்ந்தவரும் சென்ற நூற்றாண்டின் இடைக்காலத்தில் விளங்கியவருமான **ஸ்ரீ முத்தைய சுவாமிகள்** ஆவர். ஸ்ரீ குமாரதேவர் அருளிய 'சுத்த சாதகத்து'க்கு உரை எழுதிய வரும் வேறு பல நூல்களை இயற்றியவருமான ஸ்ரீலஸ்ரீ சொக்கலிங்க சிவப்பிரகாச பண்டார சந்நிதிகட்குக் குருவாய் விளங்கிய அவரால் போற்றப்பட்டவரும் ஆவர். 'சின்மய தீபிகை' உளத்தின் இருளை அகற்றி, குருவருள் எய்தி, சித்சுகம் பெற விளக்கெனத் திகழும் நூலாகும்.

இந்நூலின் அருமை பெருமை கண்டு, இப்பொழுது 22-ஆம் பட்டத்துச் சிம்மாசனாதிபதியாய் வீற்றிருக்கும் **ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய சிவப்பிரகாச பண்டார சந்நிதிகள்** இதைப் பதிப்பிக்குமாறு திருவுளப்பாங்கில் இட்ட அருளாணைப்படி இது வெளிவருகிறது. வீரசைவமாக பூசாதுரந்தரரும், ஞானப் பொலிவாம் அன்பே உருவெடுத்தாற் போன்றவரும், அடியார்பால்

தாயினுமிக்க பரிவுடையவரும், கரவாடும் நெஞ்சராயினும் நன்மையே புரியும் தகைமை யுடையவரும், முப்பதாண்டுகளாக அருளாட்சி புரிந்து செம்மை நலம் பெருக்குபவருமாகிய அடியேனது பரமசாரிய குருமகா சந்நிதானம் அடியேனையும் ஒரு பொருட்டாக மதித்து என்பால் வைத்த அன்பினால் இதைப் பதிப்பிக்கும்படி அருளினார். அடியேன் அறிந்தவரை, என் சிற்றறிவுக்கு எட்டியபடி நூலின் மூலத்தைப் பார்வையிட்டும், முகவுரையும் குறிப்புரையும் சுருக்கமாக எழுதியும் இப்பணியைத் திருவருளும் குருவருளும் துணைகொண்டு நிறைவேற்றியுள்ளேன். இதில் குற்றம் குறைகள் இருப்பின் கற்றோர் பொறுப்பார்களாக.

அடியேன் எழுதிய தாள்களைப் பார்வையிட்டுப் பிழைக ளகற்றிச் செம்மை செய்தும், மூலத்தைச் சீர்கெடாது சந்தி பிரித்தும் உதவிய எனது நண்பர், சென்னைப் பல்கலைக் கழகத் திருக்குறளாராய்ச்சித்துறை விரிவுரையாளர், வித்துவான் மு. சண்முகம் பிள்ளை அவர்கட்கு எனது நன்றி உரித்தாகும். துரிதமாக அச்சேற்ற உதவிய திரு. மு. நாராயணசாமி முதலி யாருக்கும், மலர்விழி அச்சகத்தார்க்கும் எனது நன்றி.

இந்நூலை வழங்கும் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களின் பொன்னார் திருவடிகட்குத் தலையால் வணக்கம் செய்து அவர் அருளைப் போற்றி வாழ்வாம். அவர் அருளாட்சி நீடூழி வாழ்க. குருமரபு ஓங்குக.

நமச்சிவாய வாழ்க.

திருவாதிரை நாள்<br>*10—11—1971*

அடியவன்,<br>**நல். முருகேச முதலியார்**

# இரண்டாம் பதிப்புரை

**முனைவர். சு. தங்கத்துரை**
*தமிழ் விரிவுரையாளர் (முதுநிலை)*
*திருகொளஞ்சியப்பர் அரசு கலைக் கல்லூரி,*
*திருமுதுகுன்றம்—606 001.*

தமிழ் வளர்ச்சிக்கு காலங்காலமாக திருமடங்கள் தொண்டாற்றி வந்திருக்கின்றன. குருமகா சன்னிதானங்கள் நூற்களே அதற்கு தக்க ஆதாரமாகும். திருமுதுகுன்றம் அருள்மிகு குமாரதேவர் மடத்தின் குருமகா சன்னிதானங்களாக இருந்த அருள்மிகு குமாரதேவர், ஞானக்கூத்தர், சிவப்பிரகாச சுவாமிகள் போன்ற பெருமக்கள் நூற்கள் பல திருவாய் மலர்ந்தருளி யுள்ளார்கள். அந்த மரபில் வந்த அருள்மிகு முத்தையா சுவாமிகள் அருளிய நூல் சின்மய தீபிகை ஆகும். பல குருமகா சன்னிதானங்கள் தான் பாடியது மட்டுமல்லாமல் பிறர் பாடிய நூற்களைக் காலந்தோறும் வெளியிட்டு வந்திருக்கின்றனர். அரிய நூற்களைப் பதிப்பித்து மக்கள் மத்தியில் பரவச் செய்வதும் சிறந்தத் தமிழ்த் தொண்டாகும். அந்த நிலையில் அருள்மிகு குமாரதேவர் ஆதீனத்தில் 23ஆவது குருமகா சன்னிதானம் சீர்வளர் சீர் கல்யாணசுந்தர சிவப்பிரகாசப் பரமாசாரிய சுவாமிகள் தான் பீடம் ஏற்ற பின் பல நூற்களைப் பதிப்பித்து வெளியிட்டுள்ளார்கள்:

1. அருள்மிகு குமாரதேவரின் சுத்த சாதக நூலை ஆங்கிலத்தில் திரு. நல். முருகேச முதலியாரால் எழுதப் பட்டு வெளியிடப்பட்டது — 1972.

2. தவத்திரு தி.செ. முருகதாச சுவாமிகளின் அருள்மிகு குமாரதேவ சுவாமிகள் துதிப் பாமாலை — 1974

3. அருள்மிகு குமாரதேவரின் சகச நிட்டை — 1976

4. அருள்மிகு சொக்கலிங்க சிவப்பிரகாச பண்டார சந்நதி களின் — திருமுதுகுன்றம் பெரியநாயகி பிள்ளைத் தமிழ் — 1979

5. அருள்மிகு ஞானகூத்தரின் — விருத்தாசல புராணம் — 1986
6. கி.வை. சிவசுப்பிரமணியத்தின் மாணிக்கவாசகர் யார்? — 1987
7. அருள்மிகு குமாரதேவரின் சுத்த சாதம் — 1991,
8. அருள்மிகு குமாரதேவர் வரலாறு — 1995
9. அருள்மிகு சிதம்பர சுவாமிகளின் — அருள்மிகு குமார தேவர் பதிகமும் நெஞ்சுவிடு தூதும் — 1995
10. அருள்மிகு குமாரதேவரின் - மகாராஜா துறவு — 1996

போன்ற நூற்களை வெளியிட்டுள்ளார்கள். இந்த ஆண்டு அருள் மிகு முத்தையா சுவாமிகள் சின்மய தீபிகை என்ற நூல் இரண்டாம் பதிப்பாக 23ஆவது குருமகா சன்னிதானத்தின் அருளாணையின் வண்ணம் வெளிவருகிறது. குருமகா சன்னி தானத்தில் வேண்டுகோளுக்கு இணங்க 1971இல் வந்த முதல் பதிப்பு நூலில் எந்த மாற்றமும் செய்யாமல் அப்படியே வெளி யிடப்படுகிறது.

இந்த நூல் மக்களுடைய ஞான விளக்காக அமைந்துள்ளதைக் காணமுடிகிறது. மக்களுக்கு கருத்துகளை எவ்வாறு கூறலாம் என்று சிந்தித்த ஆசிரியர் ஒவ்வொருவரும் தன்னை தானே கேட்பது போல தன் நெஞ்சுக்கே அறிவுரை கூறுவது போல அமைந்துள்ள பாங்கு போற்றுதற்குரியதாகும்.

'உன்னை நீ அறிவாயானால் உனக்கு கேடும் இல்லை' (20.3) என்ற கை வல்லிய நவநீதச் சிந்தனை இந்த நூலில் வெளிப்படுவதைக் காணமுடிகிறது.

நூலாசிரியர் மக்களின் வாழ்வியல் சிந்தனைகளைச் சிந்தித்து மனம் தான் எல்லாவற்றிற்கும் காரணம் என்ற உத்தியை கையாண்டு 'நெஞ்சே கூறு.' 'சொல்லாய் நெஞ்சே', 'செப்பும் நெஞ்சே', 'தெரிந்திலையோ ஏழை நெஞ்சே' போன்ற பல நிலை களில் நெஞ்சோடு பேசுவதாக அமைத்துள்ளார். தன் நெஞ்சே தன்னைச் சுடும் என்ற முதுமொழியைப் பயன்படுத்தியுள்ள ஆசிரியரின் உத்தி போற்றுதற்குரியதாக உள்ளது.

மக்கள் வாழ்வில் நன்மை அளிப்பதாக நினைப்பவையை பொய்யென்று சுட்டிக் காட்டியுள்ளர். 'இந்த உலகம் இந்திர சாலம் போன்றது (2.2) சுற்றம் எல்லாம் மலம் (19.1) இலவு காத்தக் கிளி போல் ஒவ்வொருவரும் பொன்னைக் காத்து வருகின்றனர். (30) சம்சாரக் கடலில் அழுந்தினால் துன்பமே (31) உலக அழிவுக்குக் காரணம் பந்தம், பரத்தைத் தொடர்பு என்கிறார். (69) பெண்ணாசை துன்பங்களுக்கெல்லாம் மூலக் காரணம் என்பதை பல பாடல்களில் வெளிப்படுத்தியுள்ளார்.

நம்மை பக்குவப்படுத்துவதற்காக நல்வினை தீவினைகளை இறைவன் கொடுத்துள்ளான் என்ற கருத்தை நூலில் (28) காண முடிகிறது.

சாதி பாகுபாடு நாட்டில் இருக்கக் கூடாது என்ற சிந்தனை ஆசிரியரால் வலியுறுத்தப்பட்டுள்ளது என்பதற்குக் கீழ் வரும் பாடல் வரிகள் சான்றாகும்.

சாதிதனில் உயர்ந்தோர்கள் உடல் அன்ன
மயமென்னில் தாழ்ந்தொர்க் கந்த
நீதியாம் அலது சயிதன்னிய மென்
றிடில் அதுவாய் நிற்கும் என்னில் (46- 1, 2)
சுடலைதனில் சுடுநாற்றம் தான் வேறுண்டோ (47.3)

வாழ்வியல் சிந்தனைகளை வெளிப்படுத்திய ஆசிரியர் மக்களுக்கு நிலையான பரம்பொருளை உணர்த்த வேண்டி நிலை யாமைச் சிந்தனைகளை அதிகமாக குறிப்பிட்டுள்ளார்.

பங்க மிலாச் சிறுபாலன் மணல்வீடு
விளையாட்டாம் பாரின் வாழ்வை (3-2) என்றும்
கோன் எனு நற்கூத்தில் வல்லோன் கோதற ஆட்டிய
பாவைக்கூத்தை நம்பி
நான் எனும் ஆணவத்தோடு நாட்கழித்து
நெஞ்சே நீ நலிவுற்றாய் (4-3,4) என்றும்
மலமென்ற மாயையிதில் எவர் இருந்தென்
எவர் அழிந்தென் மடமைநெஞ்சே (17-3) என்றும்

விளக்கியுள்ளார்.

இப்படிப்பட்ட அறியாமையிலிருந்து விடுபட குருவருள் வேண்டும், குருவருள் இல்லாமல் திருவருள் கிட்டாது என்ற உறைப்பும் வேண்டும் என்ற சிந்தனை நூல் முழுக்கக் காண முடிகிறது. ஆசிரியர் குருவின் மேல்கொண்ட பற்றிற்கு நன்றிக் கடனாகவும் அவர் குருவாக இருந்து பலருக்கு வழிகாட்டியதால் அவர்கள் பக்குவம் அடைந்துள்ளார்கள் என்ற சிந்தனையாலும் ஆசிரியர் இந்தக் கருத்தை வலியுறுத்திக் கூறியிருக்கலாம் என்று எண்ணத் தோன்றுகிறது.

மனிதனுடைய ஒவ்வொரு வளர்ச்சிக்கும் குருவருள் இன்றியமையாத ஒன்றாக இருப்பதைக் காணமுடிகிறது.

'குரு பதமலரின் இச்சை மேவிக்
கங்குல் பகல் அற்ற இடத்திலிருந்து சுகம்
காண்பாயோ, கடிய நெஞ்சே (3-3,4) என்றும், குருவின்
தாளில் சரணடைந்தால் புவிமயக்கத்தை மாற்றுவார் (94)என்றும்

'புலன் கலங்கிப் பதைக்கும் போது
சுந்தர சிற்பரமகுரு சொன்னிலை போல்,
மயக்கறுக்கும் துணிவுண்டாமோ (52-2,3) என்றும்

குருவின் இன்றியமையாமையைக் காட்டியுள்ளார். மேலும் குருவை இளமையிலே அடைய வேண்டும் இல்லாவிட்டால் பயனில்லாது என்பதைச் சிறந்த உவமையோடு குறிப்பிட்டிருப்பது சிந்தனைக் குரிய ஒன்றாக உள்ளது.

இளமையெனும் பருவமதில் சற்குருவைக்
கிட்டாமல் இருந்த தேகம்
தளருமுது மூப்பதனில் பெறுவன் என்
உரைத்தது மெய்தளர்ந்து நாளும்
இளமையற்ற தெரிவையொரு வயதுடையன்
மங்கைமணம் இசைந்து கூடி
வளம் பெறுவேன் என்றது ஒக்கும் (72)

இவ்வாறு மனித பக்குவப்பட வேண்டிய நிலையைக் கூறிய ஆசிரியர் எந்த நிலையிலும் இறைவனுடைய திருநாமத்தை மறக்காமல் இருக்க வேண்டும் என்கிறார்.

'குவிமுலையைத் தழுவியணைந்திடு பொழுதும்,
இறைசெயலைக் குறிப்பர் வல்லோர் (93-2)

என்பது, திருஞான சம்பந்தர் கூறும் 'துஞ்சலும் துஞ்சலிலா பொழுதும் நெஞ்சம் நினைந்து நினைமின் நாள் தோறும்' என்ற கூற்றுக்கு ஏற்ப அமைந்துள்ளது. அவ்வாறு இருந்தால் வாழ்வில் எல்லா நலனும் பெறலாம் என்பதில் ஐயமில்லை.

இறைவன் எப்படிப்பட்டவன் என்று கூற வந்த ஆசிரியர்,

'கண்ணின் உருவாய் அதற்கும் உள்ளொளியாய்க்
கலந்திருந்தும் கண்ணால் காணும்

எண்ணரிய உருவாகி அருவாகிப்
பலவாகி ஏகமாகிப்

புண்ணிய பாவங்களுமாய்ப் புரிபவனாய்ச்
சுகதுக்கப் பொலிவாய் நித்தம்

மண்ணிலதை அடைந்தவனாய் இறையிருந்து
விளங்கிய மெய் வளங்காண் நெஞ்சே' (105)

எனப்படம் பிடித்துக் காட்டியுள்ளார்.

இப்படிப்பட்ட இறைவனை நினைந்து, அருள்மிகு முத்தையா சுவாமிகள் கூறும்,

நேசமுறும் உடற்பாவை நான் அல்ல
வாசி கயிறல்ல நேரே

ஆசைதரு மனம் புந்தி அகங்கார
ஆணவ திரை நான் அல்ல மேலாம்

தேசு பெருஞ்சின் மோனச் செழுஞ்சுடரே
யான் என்று சிறந்த தம்பா (113-2,4)

இந்தப் பொன் மொழியை ஏற்று வாழ்வில் நலம் பெறுவோமாக.

இப்படிப்பட்ட நல்ல அரிய பல கருத்துகள் அடங்கிய இந்த நூலை தந்த ஆசிரியர் அருள்மிகு முத்தையா சுவாமிகள் இறைவனோடு ஐக்கியமான இடத்தில் எழுந்த கோயில் 23 ஆவது குருமகா சன்னிதானத்தால் புதிப்பிக்கப்பட்டு அவர்களால் நடத்தப்படும் நன்னீராட்டு விழா நாளில் வெளியிடப்படுவதைக் கண்டு மகிழ்கிறோம்.

குறிப்பிட்ட காலத்துக்குள் அச்சிட்டு தந்த சிதம்பரம் கஜேந்திரா அச்சகத்தார்க்கு நன்றி.

இந்த நல்ல செயலில் என்னையும் ஆட்படுத்திய 23 ஆவது குருமகா சன்னிதானம் அவர்களின் திருப்பாதங்களில் என் நெஞ்சைக் காணிக்கை ஆக்குகிறேன்.

திருமுதுகுன்றம், சு. தங்கத்துரை.
19-6-1997

# முகவுரை

புண்ணியன் கயிலைக் குருபரம்பரையிற் போந்த மெய்கண்ட சந்ததியில் வந்த திருமடங்களுள் மிகப் பழமையானதும், சைவத்திற்கும் வீர சைவத்துக்கும் கண்ணெனத் திகழ்ந்து வருவதும், மிகுசிவஞானமும் சித்தியும் பெற்ற குருபரம்பரையைப் பெற்றதும் திருத்துறையூர் வீரசைவ ஆதீனத்திற்குட்பட்டதும் ஆகிய பெருஞ் சிறப்புடையது ஸ்ரீகுமாரதேவர் மடாலயம். ஸ்ரீஆதி சிவப்பிரகாசர் காலந்தொட்டு இன்று சிம்மாசனத்தில் வீற்றிருக்கும் ஸ்ரீசுப்பிரமணிய சிவப்பிரகாச பண்டார சந்நிதிகள் வரை இவ்வாதீனம் நெறிதவறாது விளங்கி வருகிறது. இக் குருபரம்பரையில் வந்தவர்களில் எல்லோரும் ஞானபானுவாய் விளங்கிச் சிவபூசாதுரந்தரர்களாய் இருந்தும், பலர் மிக உயர்ந்த சாத்திரங்களையும் இயற்றி அருளியுள்ளார்கள். இந்த நூல்கள் சிவலிங்க தாரண தீக்ஷை பெற்ற அடியார்கட்கு மட்டுமன்றி ஏனையோர்க்கும் உறுதுணையாக இருந்து வருகின்றன. ஆதி துறையூர் சிவப்பிரகாச சுவாமிகள் அருளிய நூல்கள்: அத்துவித வெண்பா, கணபாஷித ரத்தின மாலை, முக்காண்டம், சதகத்திரயம், அனுபவ சடுத்தலம், மந்திரகோப்பியம், தீட்சாபோதை, மிசிரார்ப்பணம், நூற்றொரு தலம், சர்வாசாரசடுத்தலம், திருவாலந்துறைச் சிந்து, திருக்கழுக்குன்ற மாலை, விருத்தம், கப்பறை முக்கியம், தீக்ஷாவிதி, வெண்பா முக்காண்டம் முதலியன. ஸ்ரீஞானக்கூத்த சிவப்பிரகாச சுவாமிகள் விருத்தாசல புராணம் இயற்றியருளினார்.

ஸ்ரீபெரியநாயகியால் ஞானப்பால் அருளப்பெற்ற ஸ்ரீகுமார தேவர் பதினாறு ஞான சாத்திரங்களை அருளினார். அவை: மகாராஜா துறவு, சுத்தசாதகம், விஞ்ஞானசாரம், அத்துவிதவுண்மை, பிரமானுபூதி விளக்கம், ஞானவம்மானை, வேதாந்த தசாவத்தைக் கட்டளை, தசகாரியக் கட்டளை, சகசநிட்டை, உபதேச சித்தாந்தக் கட்டளை, பிரமசித்தியகவல், சிவதரிசன அகவல், வேதநெறி அகவல், பிரமானுபவ அகவல், சிவசமரசவாத அகவல் என்பனவாம். மேலும், ஸ்ரீபெரியநாயகியம்மன் பதிகம், ஸ்ரீபெரியநாயகியம்மை விருத்தம், ஸ்ரீபெரியநாயகியம்மை கட்டளைக்கலித்துறை என்பனவும் உள. ஸ்ரீகுமாரதேவர் ஆதி சிவப்பிரகாசருக்குப் பின் ஐந்தாவதாக வந்தவர். அவர் அருள்

பெற்ற தலமாகிய விருத்தாசலத்தில் அவர் காலத்தில் ஒருமடம் நிறுவப்பட்டது; அவருக்கு அனுக்கிரகித்தவர் ஸ்ரீசிவப்பிரகாசர் பொன்னடி புனைந்த பேரூர் ஸ்ரீசாந்தலிங்க சுவாமிகள். இவர் இயற்றிய நூல்கள்: வைராக்கிய தீபம், வைராக்கிய சதகம், அவிரோத உந்தியார், கொலை மறுத்தல் முதலியன. ஸ்ரீகுமார தேவரிடம் அருள்பெற்ற பேரூர் ஸ்ரீ சிதம்பர சுவாமிகள் திருப் போரூர் சந்நிதிமுறை முதலியன இயற்றியவர்.

ஸ்ரீசிவப்பிரகாச சுவாமிகட்குப்பின் வந்தவர்கள் பலர் ஞான நூலாசிரியர்களாகவும், சீரிய உரையாசிரியர்களாகவும் இருந்தனர் ஏழாவது பட்டத்தில் வந்தவர் சிறந்த ஆசிரியரான நன்னூல் சிவப்பிரகாசர் என்பவர். இவர் ஆதி சிவப்பிரகாசர் அருளிய அத்துவித வெண்பாவுக்கு ஓர் அரிய உரை இயற்றியவர். இருப தாம் பட்டத்தில் வந்த ஸ்ரீசொக்கலிங்க சிவப்பிரகாச சுவாமி கட்குக் குருவாய் விளங்கியவர், இந்த **சின்மய தீபிகை** என்ற நூலை இயற்றியவர். ஸ்ரீசொக்கலிங்க சிவப்பிரகாச சுவாமிகள் ஸ்ரீகுமாரதேவர் இயற்றிய மிகச்சிறந்த நூலான சுத்தசாதகத்துக்கு ஒரு ஞான உரை இயற்றியவர். இவர் ஆக்கிய வேறு நூல்கள்: ஸ்ரீபெரியநாயகியம்மன் பிள்ளைத்தமிழ், ஸ்ரீகுமாரதேவரபிஷேக மாலை, திரிபதார்த்த உண்மை என்பன. இப்போது 22 ஆம் பட்டத்தில் அருளாட்சி புரியும் ஸ்ரீசுப்பிரமணிய சிவப்பிரகாச மகாசந்நிதானம் வீரசைவமாக பூசாதுரந்தரராய் இருந்து கொண்டு சீடர்கட்குத் தீட்சை அனுக்கிரகித்து வீரசைவ நூல்கள் பலவற்றை வெளியிட்டு அருளுகிறார். இந்தப் பரம்பரை ஞான பீடமாயிருந்து விளங்கி வருகிறது.

## சின்மய தீபிகை

நூற்பெயர் சின்மய தீபிகை என்பது, சின்மயம் + தீபிகை எனப் பிரிக்கப்பட்டு, ஞானவிளக்கு எனப் பொருள்படும். சின்மயமான தீபம் அல்லது சின்மயத்தின் தீபம் என இத்தொடர் பெயரின் பொருளைக்கொள்ளலாம். சின்மய விளக்கம் ஞானகுருவின் அருளாலும், ஒரு சிறிய ஞான நூலாலும் பெறத்தக்கதே சின்மய ஞானத்தைச் சொல்லாது சொல்லி, சனகாதி நால்வர்க்கு சின்முத்திரை காட்டி விளக்கியவர் தென்முகக் கடவுளாகிய

ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியே, இதனாலன்றோ ஸ்ரீ தாயுமான சுவாமிகளும் தம் மௌனகுரு வணக்கத்தின்முன் சின்மயானந்த குருவின் போற்றியை வைத்துள்ளார். 'சித்' என்பது ஞானம். 'மயம்' என்பது சொரூபம், ஞானத்தின் சொரூப நிலையை உணரக் குருவின் அருளன்றித் துணைசெய்ய மாட்டாது. தாயுமானவரும்,

'அறிவாகநின்ற நிலையில் சிந்தையறநில்
 என்று சும்மா விருத்தி,
மேற்சின்மயானந்த வெள்ளம்
 தேக்கித் திளைத்து,
நான்துவா யிருக்கநீ செய்த
 சித்ரமிக நன்றுகாண்''

எனக் கூறுவர். வள்ளலார் ஸ்ரீ இராமலிங்க சுவாமிகளும் 'திருவடிப் புகழ்ச்சியில்' —

''பரசிவம் சின்மயம் பூரணம்
 சிவபோக பாக்கியம் பரமநிதியம்
பரசுகந் தன்மயம் சச்சிதானந்த
 மெய்ப் பரம ஏகாந்த நிலையம்
பரமஞானம் பரம சத்துவம்
 மகத்துவம் பரம கைவல்ய நிமலம்
பரமதத்துவ நிரதிசிய நிட்களம்
 பூதபௌதிகாதார நிபுணம்''

என விவரித்துள்ளார். சின்மய தீபிகை நூலாசிரியரும்,

''புகரின் உளத்தின் இருளகற்றப்
 பொலிந்து வளர்சின் மயதீபம் பகர''

அருள்வேண்டி நூலைத் தொடங்குவார். எனவே, மவுன நிலையில் சின்மயம் தன்மயமாகி ஆனந்தவாரியில் திளைப்பதற்கு ஏதுவாய் முதற்கண் உள்ளத்தின் இருளை அகற்ற ஒரு தீபமாக இந்நூலைப் பாடியருளினார்.

''பரஞ்சுடராய்ச் சின்மயமாய்ப் பரம்பொருளாய்
இலகுகின்ற பரம சோதியை'' (சின்மய-2)

உள்ளத்தில் சித்பொருளை உணரக் குருவருளன்றி எய்தப் படமாட்டாததை மீண்டும் மீண்டும் நூலாசிரியர் பேசுவார். நூலின் இறுதியில் சின்மயத்தின் சொரூபத்தைப் பற்றிப் பேசுமுன் மல இருளகற்றிக் குருவருள் பெறுவதற்கு நல்லதோர் ஒளி நெறியைக் கூறுவார்.

## நூலாசிரியர் வரலாறு

இந்நூலாசிரியர் முன்போந்தபடி ஸ்ரீமுத்தைய சுவாமிகள் என்பர். இவர் ஸ்ரீசொக்கலிங்க சிவப்பிரகாச சுவாமிகட்குக் குருவாயிருந்தவர். இச் சுவாமிகள் தாம் இயற்றிய பெரிய நாயகியம்மன் பிள்ளைத்தமிழ்ப் பாயிரத்தில் சகாப்தம் 1811 (கி.பி. 1889) என்று பாடியுள்ளதால், ஸ்ரீமுத்தைய சுவாமிகள் காலம் சுமார் அதற்கு ஐம்பது ஆண்டுகட்குமுன் இருக்கலாம். ஸ்ரீசொக்கலிங்க சுவாமிகள் ஸ்ரீகுமாரதேவர் அருளிய 'சுத்த சாதகத்தின்' உரையில் தன் குருநாதனைப் பின்வருமாறு துதி செய்துள்ளார்.

தத்து வச்சிரத் தாடிடு தற்பரம்
இத்த லத்தெளி யேன்பவம் இற்றிட
உத்த மக்குரு வாய்வந் துதித்தருள்
முத்தய் யன்பத முன்னுதி யுள்ளமே.

ஆதீனத்துக் குரு பரம்பரை துதியில், ''கருமலங்களைந்த முத்தையன்'' எனவும் போற்றப்பட்டுள்ளது.

இவ்வாதீனத்தைச் சார்ந்த ஸ்ரீ திருமேனிலிங்க சுவாமிகளால் இயற்றப்பட்ட 'குருதோத்திரப் பாமலை'யில் ஸ்ரீ முத்தைய சுவாமிகளின் துதி பின்வருமாறு:

அன்னைகற் பகவல்லி அணிமயிலாய்ப் பூசித்த
முன்னைநகர் மூதறிஞர் முப்பொழுதும் தொழுதேத்த
இன்னவினை நீக்கிடுவான் எழில்மடத்தி லேயெழுந்த
சன்னிதியாம் முத்தைய சற்குருவைப் போற்றிடுவாம்.

இதனால் சுவாமிகள் சென்னைத் திருமயிலாப்பூரிலுள்ள ஸ்ரீகுமாரதேவர் மடத்திலும் எழுந்தருளியிருந்தார் எனத் தெரிய

வருகிறது. அவர் செய்த வேறு நூல்கள் இன்னவென்று தெரியவில்லை. சுவாமிகளின் சமாதி திருமயிலைப் பதியின் தெற்கு மாடவீதியில் விளங்கும் ஸ்ரீகுமாரதேவர் மடலாயத்தில் விளங்குகிறது.

## நூல் அமைப்பும் சிறப்பும்

இந்நூல் பாயிரத்தில் ஐந்து பாட்டுகள் உள்பட 119 பாட்டுகள் கொண்டது. அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தத்தில் பாடப்பட்டுள்ளது. சொல்நயமும் பொருள்நயமும் செறிந்து இனிமை பெற்றுள்ளது. பாட்டுகளின் போக்கு ஆற்றொழுக்கு போல் செல்வதாயும் ஸ்ரீதாயுமான சுவாமிகள் பாடல் போல் நல்லோசை உடையதாயும் உள்ளன. நெஞ்சுக்கு அறிவுரை கூறும் முறையில் சின்மயானந்தத்தை நாடும் வகையைப் பகர்கின்றன. பாயிரத்தில் கூறியது போல் நெஞ்சிருளை நீக்கத் தீப ஒளி காட்டுகின்றன.

முதல் பாட்டில் பரவெளிக்கண் குருபதத்தைப் பெற நெஞ்சு அழைக்கப்படுகிறது. பின் 12 பாட்டுகளில் பாரின் வாழ்வு நிலையற்றது, வல்லோன் ஆட்டிய பாவைக் கூத்துப் போன்றது, புவியாண்ட மன்னரும் ஓடேந்தி இரப்பார், புவியாளினும் உதரபசிக்கு ஏங்குவதால் உள்ளதே போதும் என்று அறிவாய், உனக்கமைத் தல்லாமல் அலைந்தாலும் வாராது, எனவே சங்கற்பம் இகழ்ந்து பொன்னிலங்கு வாழ்வை நாடுவாய் என நெஞ்சுக்கு அறிவு புகட்டப்படுகிறது. பின் 11 பாட்டுகள் மாய வாழ்க்கையில் சுற்றம் முதலியன கற்பனையே, இந்த உடல் இறக்கும் போது எவரால் இதம் பெறுவாய், பொருள் புகழ் நாடி உலகத்தைச் சொந்தமென எண்ணி மெய்யானதை அறியாமல் அலைகின்றாய், குருவின் அருள் நிலையில் பிணம் போல் இருந்து, சுகவடிவை எய்துவாயாக எனச் செப்புகின்றன.

பின் சுமார் இருபது பாட்டுகள் யாக்கை நிலையாமையைப் புகட்டுகின்றன. தன் முயற்சியால் சுகமடைய எண்ணுதல் யானை உண்ட விளங்கனி போல் ஆகும்; இனிப் பொசிக்கவேண்டுமெனப் பொருளீட்டல் தேனீக்கள் சேர்த்த தேனை வேடன் கொண்டது போலாகும்; பொருள் காத்த பூதமாய் அவலமாகாதே; படுத்து விடியுங்காலையில் எழுவது நிச்சயமில்லா வாழ்வை யார் காக்க

முடியும்; குடும்பத்தைக் காக்கத் தானன்றி வேறில்லை என்றெண்ணும் மயக்கம் வேண்டாம்; கல்லுக்குள் தேரைக்கும் முட்டைக்குள் குஞ்சுக்கும் உணவளிக்க இறைவன் உளன். எனவே, எதையாயினும் உண்டு உடுத்துப் பரம குருவின் அருளை நாடு. சுவையெல்லாம் நாவளவேயாகும். எனவே, திருவோடே, நிதியாகச் சாதிபேதம் அற்று வாழ்வாய்.

அடுத்து வரும் சுமார் 10 பாட்டுகள் புலனடக்கத்தைப் பற்றிப் பேசுகின்றன. புலன்களை நம்புவது நதியின் நீரை மணல் உறவாடி நிலைக்க நின்று ஏமாறுவது போலாகும். மங்கையர் மதிமுகமும், வில் நுதலும் வேற்கண்ணும் இளமுறுவலும் எண்ணிப் பார்க்கில் தோலும் தசையும்தான். அவர் மயக்கில் சொக்காமல் பரமகுரு சொல்லில் ஈடுபட்டுப் பரமசுகம்பெற நினைப்பாய். மனவிருத்திக்கு இடந்தரின் அத்துவித பூசை செய்யும் நேரத்திலும் மங்கையர் ஆசை தாக்கும். இதன் பின்னர் வரும் சுமார் 10 பாட்டுகள் மரண அவத்தையை நினைவுபடுத்துகின்றன. புலன்கலங்கி, பொறிநிலை தளர்ந்து, கண்ணிருண்டு வாய்குழறி நிலைகலங்கி நிற்கும் நேரம் வருமுன் குருவடி அணுகி நலம் பெறுவாய். இறந்தபின் இந்த உடல் நரி நாய்க்கு இரையாகும். இளமையிலேயே சற்குருவைக் கிட்டாமல் மூப்பில் நாடுவன் என்று காலத்தை வீணாக்காதே, இவ்வாழ்வு நீர்மேற்குமிழி போலானது. துன்பப் பாத்திரமாம் அவ்வாறல்லாமல் குருவருளைக் கருதி மோன தன்திதினைத் தேடு என அறிவுறுத்துகின்றன.

அடுத்த 10 பாட்டுகள் நெஞ்சு சமயங்களில் ஐயம் கொண்டு உண்மைச் சமயம் கண்டால் அதில் சார்வேன் என்று மயக்கம் கொண்டு வாளா இருக்கும் நிலையை எச்சரிக்கின்றன. குருடர்கள் யானையின் ஓர் அங்கத்தையே தடவிப்பார்த்து அதுதான் யானை என்று மயங்குவது போலவும்; சிறுவர்கள் வானத்தில் உள்ள நிலவு தத்தம் வீட்டிற்குள்தான் வருகிறதென்று எண்ணுவது போலவும் மயங்காமல், வாதத்தில் உழலாமல், எவரெவர்கள் எதை இறைஞ்சிடினும் பரஞ்சுடரே அதிலிருப்பன் என உணர்ந்தாலும், தவமிசைந்த பரமகுரு காட்டிய நிலையில் நின்று பூரணமுடையாய், நிராமய குருமொழியால் பதிந்து ஆனந்த ஆசையொடு பணிவதல்லால் வேறு ஓர் பூசைநெறி அறியவேண்டியதில்லை.

குரு சொன்ன வழியில் நிற்கும் சற்சனரை அடுத்து அவரோடு அன்பாகப் பழகினால் பின் முத்தி பெறக் குருகாண்பாய்.

இதன் பின்னுள்ள பாகம் குருவருள் நிலையையும் பயனையும் கூறுகின்றது. குருவருள் நிபதிதவர்கள் சகமயக்கத்தைவிட்டு, உலகில் அகில உயிரையும் தன்னுயிர்போல் கண்டு, இன்ப துன்பங்களால் பாதிக்கப்படாமல், துய்ய அமலன் கமலமலர்த் தாளில் சிந்தை வைத்துச் சீர்பட்டுத் துலங்குவார், தேசிகனார் அம்கையால் முத்திரை காட்டிப் போதித்த பரமநிலையைச் சேர்ந்து வாசமலரணைமீது வண்டெனவே மோனத்தில் திளைத்து நிற்பார். உலக விவகாரங்களில் கலந்து இருந்தாலும் காமக்காதல் கண்ட ஒருத்தி காதலனையே எண்ணி நிற்பாள் போல், பரஞ்சுடரான குருபதத்தையே உன்னி நிலைபெறுவார்.

இறுதியாகவுள்ள 15 பாட்டுகளில் அணைந்தோர் தன்மை கூறியபின் இறைவனின் தடத்த நிலையைப் பற்றியும் சின்மய மோன நிலையைப்பற்றியும் கூறப்படுகின்றன. இந்தப் பகுதி நூலுக்குச் சிகரம் போலுள்ளது. சிவஞானபோத சூத்திரங்களின் சாரம்போலவும் சுத்தசாதகம் போன்ற சித்தி நூல்களின் கருத்துப் போலவும் இப்பாட்டுகள் உயர்ந்த தத்துவங்களைக் கூறு கின்றன. இறைவன் அகரம்போல் மருவு உயிர்க்கு உயிராகித் தனித்தும் ஒன்றாயும் வயங்குகிறான். அப்படியானால் உயிர்கள் துயரறவே ஒருவிதமாய் ஏன் வாழ்வதில்லை என ஆசங்கிக்கின், உலகில் ஆடுகின்ற பாவைகளெலாம் அரசனல்ல, அந்தக் கூத்தில் அரச வேடத்தால் அடையும் சுகமும், துக்கம் அடைபவனின் துன்பமும் பொய்யே. பரிபக்குவமடைந்த உயிர் சுகதுக்கங்களில் வாட்டமுறாது எல்லாம் ஈசன் செயல் என உணர்ந்து மலபரி பாகம் அடையும். அதன் பயனாக சத்திநிபாதம் பெற இறைவன் குருவடிவாய்ப் புவியில் வயங்கி அருள்புரிவான்.

மனமேநற் சின்மயத்தில் ஆசைவரு
  வித்துகுரு வடிவாய் வந்து
கனவெளியில் தங்கவொரு நிலைகாட்டி
  அந்நிலையிற் கருதொண் ணாத
தனிச்சுடராய் வெளிகாட்டித் தனியுணர்ந்த
  ஆனந்தத் தவனு மாகி
வனமுலைமா தொடுமயங்கு பவனும்இறை
  யாய்ம் புவியில் வயங்கும் அன்றே. (சின்மய, 108)

அந்நிலையில் அவனே தானேயாகிக் காட்டுபவனும் காணச் செய்பவனும் துரியநிறை கடவுளின் அத்துவித சம்பந்தத்தால் வாட்டமிலாச் சிற்சுகம் உயிர் அடையும். அந்தச் சீவமுத்த நிலையில் பசுகரணமெல்லாம் பதிகணரமாய், யான் எனது என் செயல் என்பவை எல்லாம் மறந்து, உயிர் பதியோடு ஒட்டி வாழும். இதுவே சின்மயானந்த சுகம்.

## நூலின் கவிநலன்கள்

இந்நூலின் கவிநலம் பல. நூலாசிரியரின் சொற்பிரயோகம் வியக்கத்தக்கது. எளிய சொற்களைக் கொண்டே தன் சொந்தப் பாணியில் அரிய கருத்துகளை விளக்குகிறார். நூலில் உவமைகளும் பழமொழிகளும் நிறையக் காணப்படுகின்றன. இதனால் நூற்கருத்து பண்டிதர்க்கு மட்டுமன்றி பாமரர்க்கும் விளங்கும். உதாரணம்:- சிறு பாலன் மணல் வீடு விளையாட்டாம் பாரின் வாழ்வு, இரவுதனில் கூத்தாடும் அவைக்கு நிகராகும் இல்வாழ்வு, பழுத்தமரந்தனில் பறவை நிறைந்திருந்து பழமோயப் பறந்தது போல், கொழுத்த நிதி சிறுத்தவுடன் சுற்றம் அகல்வர், தன் முயற்சியால் சுகம்வேட்டல் ஆனை உண்ட விளங்கனி போல், அனிச்சமலர்க் கொழுந் தேனைத் தேனீக்கள் சேர்க்க வேடன் கொண்டாற்போல், கோபுரத்துப் பொற்பாவை கோபுரம் தாங்கிக் கூனியது போல், கொக்குடன் குக்குடம் சேர்ந்தால் அண்டமது குறிக்குமோ, நதிப்புனலுடன் மணல் உறவாடிக் கரைந்தாற் போல், நீர்க்குமிழியைக் கட்டல்போல், முதலியன.

## கருத்துவார்த்தும்

இந்நூலில் ஸ்ரீசாந்தலிங்கரின் வைராக்கிய தீபம் ஸ்ரீகுமார தேவரின் மகாராஜா துறவு, போன்ற நூல்களில் காணப்படும் துறவு வைராக்கியம் பற்றிய கருத்துகளும், சுத்தசாதகத்தில் காணப்படும் குருவருள் நிலையும் காணப்படுகின்றன.

## நூற்பயன்

இது பாயிரத்தில் ஆசிரியர் அருளியபடி உளத்தின் இருளகற்ற எழுந்த நூலாகும். இது அனுபவ நூல். ஆசான் அருள் பெற்றதனாலும், அறிஞர் பழக்கத்தாலும் உதித்தது என ஆசிரியர் கூறுகிறார். இந்நூலினால்,

''குறிகண் டமர்ந்த குணத்தோர்கள்
பேசா ராகிக் குருபதத்தைப்
பெறுவா ரின்பம் பெறுவாரே'' (பாயி.4)

என்பது ஆசிரியர் திருவாக்கு. நம்மனோரர் படித்தும் அனுபவித்தும் பயனடைவாராக!

## முற்பதிப்புகள்

இந்த ஞானநூல் 1857ஆம் ஆண்டு (பிங்கள௵ கார்த்திகைமீ") ஸ்ரீமத் வடலூர் இராமலிங்க சுவாமிகளால் பதிப்பிக்கப்பட்டது. ஆசிரியர் இன்னார் என்று அதில் குறிக்கப்பட வில்லை அப்பதிப்பின் தலைப்பில், ''சிதம்பரம் இராமலிங்க பிள்ளை அவர்களால் பார்வையிடப்பட்டு மண்ணிப்பாக்கம் சபாபதி முதலியார், பாக்குப்பேட்டை மதுரை முதலியார் இவ்விருவர்களால் முத்தமிழ் விளக்க அச்சுக் கூடத்தில் பதிப்பிக்க பட்டது'' என்று வரையப்பட்டிருக்கிறது. திருஅருட்பாவைப் பதிப்பித்த திரு.ஆ. பாலகிருஷ்ணபிள்ளை, ''தெரிந்தவரையில் ஸ்ரீசுவாமிகள் கடைசி முறையாக அச்சிற் பதிப்பித்தது இந்த அரிய ஞானநூல்தான். இந்நூலை இயற்றிய ஆசிரியரது பெயர் முதலிய எந்தத் தகவலும் சுவாமிகளது பதிப்பில் காணப்படாத தால் அவை அக்காலத்திலேயே மறைந்தன போலும்'' என எழுதியுள்ளார் அப்பதிப்பைப் பின்பற்றி 1970ஆம் ஆண்டு காஞ்சீபுரம் ஸ்ரீஇராமானந்த யோகியார் அச்சிட்டார். இப் பதிப்பில் நூலின் ஆசிரியர், 'விருத்தாசலம் குமாரதேவ சுவாமி களாதீனம் முதன்மைய சுவாமிகள்'' எனக் கண்டுள்ளார். திரு. பாலகிருஷ்ண பிள்ளை இந்நூலைத் தாம் 1932ஆம் ஆண்டில் அச்சிட்ட திருஅருட்பா உபதேசப் பகுதிக்கு அநுபந்தமாகவும், 1935ஆம் ஆண்டு அச்சிட்ட திருஅருட்பா வியாக்கியானப் பகுதியுள் இறுதியாகவும் அமைத்து அச்சிட்டுள்ளார். ஸ்ரீஇராமலிங்க சுவாமிகளது சம்பந்தம் ஏற்பட்டிருக்கும் இந்நூலைத் திருவருட் பாவுடன் பிரகுபாடு ஒற்றுமை கருதிச் சேர்த்திருப்பதாக திரு. பாலகிருஷ்ண பிள்ளை அவர்கள் எழுதியுள்ளார்கள். எனவே, இந்நூலின் மகிமை மேலும் விளங்கும். ஸ்ரீஇராமலிங்க சுவாமிகள் ஸ்ரீகுமாரதேவர் இயற்றிய சுத்தசாதகத்தையும், இந் நூலையும் போற்றினார் என்று ஆன்றோர் கூறுகிறார்கள். எனவே, இந்த நூல் மீண்டும் உரையுடன் இப்பொழுது வருவது உலகுக்கு உபகாரமாகும்.

திருவாதிரை நாள்
10—11—1971

நல். முருகேச முதலியார்

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# ஸ்ரீகுமாரதேவ சுவாமிகள் ஆதீனம் சந்தானகுருபரம்பரை வணக்கம்

இருபதாம் பட்டம்

சொக்கலிங்க சிவப்பிரகாச சுவாமிகள்

அருளியவை

பதினான்குசீர் விருத்தம்

புண்ணியன் கைலைக் குருபரம் பரையிற்
போந்தமெய் கண்டசந் ததியில்
பொருவில்சீர்த் துறைசை நகர்வளர் சிவப்பிர
காசர்தம் பொன்னடி புனைந்த
எண்ணில்நற் றவத்துச் சாந்தலிங் கேசன்
எல்லையில் மோனானந்த நிலையாம்
இரும்பொருள் அளித்த விருத்தவம் பிகையாள்
இன்புறும் குமாரசற் குரவன்
திண்ணிய அருள்சேர் சிதம்பர தேவன்
செப்புறும் பழனிமா முனிவன்
திருவமர் ஆறு முகன்குரு வாகத்தான்
செப்பும் வேலாயுதத் திறலோன்
கண்ணினுக் கிமையாங் குழந்தை வேலடியேன்
கருமலம் களைந்த முத்தையன்
கருதுமிச் சந்தான குரவர்கள்தாட்
கமலமுன் நினைந்துகை தொழுவாம் 1

புண்ணியன் கைலைக் குரு பரம்பரை - ஸ்ரீ கண்ட - சிவ பரம்பரை; மெய்கண்ட சந்ததி-ஸ்ரீ மெய்கண்ட- தேவநாயனார் முதலாய சந்தான குரவர்கள் நால்வரின் வழி; பொருளில்- ஒப்பற்ற; துறைசைநகர்-திருத்துறையூர்; இரும்பொருள்-மாறிலாத சிவஞானம்; எல்லையில்-அளவில்லாத; விருத்தவம்பிகை- திருமுது குன்றத்தில் எழுந்தருளிய ஸ்ரீபெரியநாயகி; குமார சற்குரவன்-ஸ்ரீ குமாரதேவர்; கருமலம்-கரு + மலம், அதாவது மூலமலம், ஆணவம்; சந்தானகுரவர்-குருபரம்பரை; தாட்கமலம்-திருவடித்தாமரை.

## குரு வணக்கம்

கலிவிருத்தம்

தத்து வச்சிரத் தாரிடு தற்பரம்
இத்த லத்தெளி யென்பவம் இற்றிட
உத்த மக்குரு வாய்வந் துதித்தருள்
முத்தய் யன்பதம் முன்னுதி உள்ளமே 2

தத்துவச்சிரம் - தத்துவங்கட்கு அதீதமானது; தற்பரம்-பரசிவன்; இத்தலம்-இப்பூலகில்; பவம்-பிறப்பு; முன்னுதி-நினை.

அறுசீர் விருத்தம்

பொன்னரங்கில் புலியரவந் தொழப்புயங்க
புனிதன் பொற்றாள் (தாண்டவஞ்செய்
என்னரங்கம் இதயமதா யிருத்திமல வலிதீர்த்த
இசையான் என்றன்
முன்னரங்கம் பொருளாக்கிக் கொள்ளும் முத்தையனருள்
முதிர்வால் இந்தச்
சொன்னரந்தம் பெறுசுத்த சாதகநூற் குரைதுணிந்து
சொல்வாம் அன்றே. 3

பொன்னரங்கு - பொன்னம்பலம்; புலியரவம் - பதஞ்சலி வியாக்கிரபாதர்; புயங்க தாண்டவம்-இறைவனின் எழுவகைக் கூத்துகளில் ஒன்று, (புயங்கம்-பாம்பு); மலவலி-மும்மலங்களின் ஆற்றல்; இசையான் = புகழுடையான்; முன்னரங்கம்-உடல் (பழைமையாக வரும் பிறவி); அருள் முதிர்வு-பூரண அருள்; சொன்னரந்தம்-சொல் + நரந்தம், கத்தூரிபோல் கமழும் சொற்களையுடைய; சுத்த சாதகம்-ஸ்ரீகுமாரதேவர் அருளிய 'சுத்த சாதகம்' என்ற நூல்.

தவத்திரு திருமேனிலிங்க சுவாமிகள் இயற்றிய
குருதோத்திரப் பாமாலையிலுள்ள
ஸ்ரீமத் முத்தைய சுவாமிகள் போற்றி

அன்னைகற் பகவல்லி அணிமயிலாய்ப் பூசித்த
முன்னைநகர் மூதறிஞர் முப்பொழுதும் தொழுதேத்த
இன்னவினை நீக்கிடுவான் எழில்மடத்தி லேயெழுந்த
சன்னதியாம் முத்தைய சற்குருவைப் போற்றிடுவாம். 4

முன்னைநகர்-பழமையான திருமயிலை; எழில் மடம்மயிலையிலுள்ள ஸ்ரீகுமாரதேவர் மடம்; எழுந்த சன்னதி-எழுந்தருளியிருந்த குருமகா சந்நிதானம்.

## சின்மய தீபிகை

### பாயிரம்

அகர உயிராய்ச் சுடரொளியாய்
அகண்ட விரிவாய்த் துரியநடுச்
சிகர மணியா மவுனநிலைத்
தேசோ மயமென் புதைப்போற்றிப்
புகரி னுளத்தின் இருளகற்றப்
பொலிந்து வளர்சின் மயதீபம்
பகர அருளும் பரமகுரு
மதும மலர்மென் பதம்காப்பாம். 1

அகரவுயிராய்-எழுத்துக்கெல்லாம் அகரம் முதலாவது போல் எல்லா உயிர்க்கும் உயிராய்; சுடரொளியாய்-சித்சொரூபியாய்; அகண்டவிரிவாய்-சர்வவியாபியாய்; துரியநடுச்சிகரமணி-மகாதுரிய நிலையில் பிரகாசிக்கும் பொருள்; மவுனநிலை-மவுனத்தில் நிலைத்த. புகரினுளம்-மாசுடைய உள்ளம்; சின்மயதீபம்-சித் + மயம் + தீபம்-ஞானமயமான விளக்கு; இந்த ஞானம் வைகரி வாக்காலாவது, வரிவடிவிலாவது சொல்ல ஒண்ணாததால், சற்குருவால் சொல்லாமல் சொல்லி அருள்வது; தக்ஷிணாமூர்த்தியின் சின்முத்திரை; சின்மயதீபம்-இந்நூலின் காரணப்பெயர்; சின்மயம் அடைய விளக்கமாய் உதவும் நூல் என்பது பொருள்.

சீரார் மவுனம் திகழ்சுடராய்த்
திகழும் ஒளியாய்ச் சின்மயமாய்ப்
பாரார் உயிரின் பரமநிலை
பதிந்தா னந்த முற்றுநிதம்
பேரா தருளும் குருதிருத்தாள்
பெற்றே மயக்கப் பிணக்கறுத்து
வாரா வின்பக் கடல்புகுகி
வாழ்வோர் இணைத்தாள் வாழ்த்துவமே. 2

மவுனம் ...... ஒளியாய் — மவுனத்தில் இறைவன் உள்ளொளியாக நின்று சுடர் ஒளிவிட்டு ஞானத்தை அருளுதல்; பரமநிலை பதித்து — சத்திநிபாதம் தோய்ந்து; மயக்கப் பிணக்கறுத்து - சவிகற்பம் அகன்று நிர்விகற்பமாகி, வாராவின்பம் - முத்திப்பேறு.

பொருவேல் விழியொண் பொன்திதலை
　　பொலிந்த குரும்பை முலைமங்கைப்
பருவம் இசைந்த மடமயிலைப்
　　பரிவாய் அணையும் பருமயக்கில்
திரியும் விடர்கொக் கோகவிதம்
　　தேடி யுணர்வார் எனப்பரம
குருவின் மலர்த்தாள் வேண்டுபவர்
　　கொள்வார் இந்நூற் குறிப்பறிந்தே. 3

பொருவேல் — போர் புரியும்வேல்; குரும்பை — இளந் தேங்காய்; பருமயக்கம் — பெரிய மோகம்; விடர் — தூர்த்தர்; கொக்கோக விதம் — காம நூலாகிய கொக்கோகத்தில் சொல்லிய முறைகள்; தேடியுணர்வார் — ஆராய்ந்து அறிவார்; பரம குரு — சிவபெருமான் (தக்ஷிணாமூர்த்தி).

தேசோ மயமாம் இறையியற்றுஞ்
　　செய்கை யானும் துரியநிறை
ஆசா னருள்பெற் றதனானும்
　　அறிஞர் பழக்கத் தானு மென்னுட்
கூசா துதித்த இந்நூலின்
　　குறிகண் டமர்ந்த குணத்தோர்கள்
பேசா ராகிக் குருபத்தைப்
　　பெறுவார் இன்பம் பெறுவாரே. 4

இறை — கடவுள்; செய்கை — திருவருள்; துரியநிறை ஆசான் — துறைசை ஸ்ரீசிவப்பிரகாச குருநாதர்; கூசாது — துணிவுடன்; குறி — பொருள் நோக்கம்; குணத்தோர்கள் — இராஜச தாமச குணங்கள் நீங்கிய சத்துவ குணமுடையோர்கள் பேசாராகி — மௌனநிலை அடைந்து; குருபதத்தை — குருவின் திருவடிகளை.

பாலர் மழலை மொழிகேட்டுப்
　　பாகோ டமுதம் கலந்துண்டாற்
போல மகிழ்ந்தா னந்தமிகப்
　　பொங்குந் தாயுண் மையையறிந்து
ஞால மதிலிச் சிறுவனுரை
　　நன்று நன்றென் றகமகிழ்ந்து
சால வருளா திருப்பாரோ
　　சற்சிற் சுகத்தில் சார்ந்தோரே. 5

சிறுவன் — ஆக்கியோன் தன்னைக் குறித்துக் கூறும் பணிமொழி. தன் நூலுக்கு குருவருள் சித்திக்கும் என்றபடி.

பாயிரம் முற்றிற்று.

உ

சிவமயம்

# சின்மய தீபிகை

அருமறையின் சிரப்பொருளாய் அண்டபகி
ரண்டமுமாய் அமல மோனத்
தொருபொருளாய்ப் பலவிதமாய் உணர்வரிய
பேரொளியின் உண்மையாகும்
பெருவெளிகண் டானந்தம் பெறுதற்குக்
குருபதத்தைப் பெறுதல் வேண்டி
இருளறவே மலம்விளைக்கும் நெஞ்சையழைத்
தறிவுரைத்த இயல்பு சொல்வாம். 1

மறையின் சிரப்பொருள் - வேதங்களின் முடிவு; மோனத் தோரு பொருளாய் - மோனத்தில் எழும் ஞானமாய்; பேரொளி - உள்ளொளி; பெருவெளி - தகராகாசம்; நெஞ்சை ... சொல்வாம் - குருபதத்தைப் பெற்று தகரவின்பம் பெறுவதற்கு நெஞ்சை அழைத்து உபேசித்தல்.

பரஞ்சுடராய்ச் சின்மயமாய்ப் பரம்பொருளாய்
இலகுகின்ற பரம சோதி
நிரஞ்சனனாம் விஞ்சை கற்றோன் இயற்றுமிந்த்ர
ஜாலமெனும் நிலத்தின் வண்மை
தெரிந்திதனை யகற்றாமற் கண்டபல்
பொருட்காகச் சிந்தை செய்து
திரிந்தனையே நெஞ்சேநீ என்றறிவுாய்
பரமவெளி தேடு மாற. 2

நிரஞ்சனன் - மாசில்லாதவன்; விஞ்சை - வித்தை; இந்த்ர ஜால ... சிந்தை செய்து - இந்திர ஜாலத்தில் காணப்படும். பொருள் பொய் என்று அகற்றாமல் அவைகளில் பற்றுவைத்து

எங்குநிறைந் திலகியடி முடிநடுவாய்
எப்பொருட்கும் இறையாம் என்னும்
பங்கமிலாச் சிறுபாலன் மணல்வீடு
விளையாட்டாம் பாரின் வாழ்வை
இங்குநிலை யெனமதிப்ப தொழிந்துகுரு
பதமலரின் இச்சை மேவிக்
கங்குல்பகல் அற்றவிடத் திருந்துசுகம்
காண்பாயோ, கடிய நெஞ்சே! 3

பாரின் வாழ்வு - மானுடவாழ்க்கை, கங்குல் பகல் அற்றவிடம் - இராப்பகலற்ற நிலை, அதாவது சித்தத்தை ஒரு நிலையில் வைத்து மாறுதலின்மையால் காலம் பொருள் படாத நிலை.

தேனினருஞ் சுவையாகித் திகழ்மலரின்
மணமாகித் தெருளு மாகி
வானிறைந்த வெளிமருவி யுயிர்க்குயிராய்த்
துரியநிறை வயங்குஞ் சோதிக்
கோனெனுநற் கூத்தில்வல்லோன் கோதறவாட்
டியபாவைக் கூத்தை நம்பி
நானெனுமா ணவத்தோடு நாட்கழித்து
நெஞ்சேநீ நலிவுற் றாயே. 4

தெருள் - தெளிவு; துரியநிறை - துரியநிலை; நானெனு மாணவம் - இறைவன் ஆட்டுவிக்க ஆடும் ஆட்டங்கட்குத் தாமே அதிகாரியென ஆணவத்தால் உண்மை அறியாது.

வருக்கமுறச் சொற்புனத்திற் கண்டதெல்லாம்
நிலையென்றே மதிப்பார் போலும்
திருக்கமல நதிப்புனலென் றருஞ்சுரங்கண்
டோடுமறி திகைத்தல் போலும்
பெருக்கமுற்றே யழிவாழ்வை வாழ்வென்னும்
பேதைமையைப் பிரித்த றுத்துக்
கரைத்துவிடா தலைந்தாயென் றறிவுரைக்க,
நெஞ்சமினிக் கனன்று கூறும்' 5

வருக்கமுற-திரளாக: நிலையென்றே-உண்மையாக நிலை; யானது என்றே; கமலம்-நீர்; அருஞ்சுரம்-கொடியபாலை நிலம் மறி-மான்; பிரித்து, அறுத்து கரைத்து-அவித்தையை இன்ன தென்று தெளிந்து பிரித்தல் பின் அதை விட்டகலல், பின் வாசனா மலம் தொடராது ஐந்தெழுத்தால் கரையவைத்தல்: கனன்று- சினந்து.

மாயமெனும் ஆசையற வல்லமைபெற்
றிடும் அறிவே மண்ணில் மாழைச்
சீயம்இரு புறந்தாங்கும் ஆசனத்தில்
வீற்றிருந்து செங்கோ லோச்சி
நாயகனாய் அழியாத வாழ்வுடைய
மன்னனென் நாளும் வாழ
நேயமிக வுற்றேனஃ தடைவனென
அறிவுமினி நிகழ்த்து மன்றே. 6



மண்ணில்-உலகத்தில்; மாழை-பொன்; சீயம்-சிங்கம்; மாழைச் சீயம் இரு புறந்தாங்கும் ஆசனம்-பொன்னாலாகிய சிங்காசனம்.

நிலவுமிழுந் தனிக்குடைக்கீழ் அரசாண்டு
நேரலர்கள் நெருங்கிப் போற்றப்
பலவிதமாப் படைபுடைசூழ்ந் திடக்களிற்றின்
பிடரியொளிர் பரிதி யென்ன
இலக்கின்றோர் ஓடேந்தி இரந்தமன்னர்
எண்ணிலார் என்ற றிந்தும்
உலகுதனில் ஆசையுற்ற நெஞ்சேநீ
என்றிதனை உணரு வாயே. 7

நேரலர்-பகைவர்; போற்ற-புகழ, பாராட்ட; பிடரி-புறங் கழுத்து, மத்தகம்; பரிதி-ஞாயிறு; ஓடு-பிச்சைக்கலன்.

வாரிதிசூழ் புவிதன்னையே தன்னதென
மதித்தாண்டு மாண்ட மன்னர்
பாரினினுள் மணல்நிகர்ப்பார் எனவுரைக்கும்
பழமொழிபட் டாங்கு கேட்டும்
தாரிலங்குந் தாம்முடித் தரணிபர்கள்
முதலானோர் தளர்ந்து தேகம்
சீரறவே செத்துமண்ணாஞ் செயலறிந்தும்
புவிமயக்கில் சேர்ந்தாய் நெஞ்சே. 8

வாரிதிசூழ்-கடல்சூழ்ந்த. மணல் நிகர்ப்பார்-கடல் மணல் போல் எண்ணற்றவர்; பட்டாங்கு-உண்மை, சாத்திரம்; தார்-மாலை; தாமம்-முடியுறுப்புக்கள் ஐந்தனுள் ஒன்று; தரணிபர்-உலகாளும் மன்னர், தளர்ந்து-உறுப்புகள் மெலிவு பட்டு; புவிமயக்கம்-மண்ணாசை.

இரவுதனில் கூத்தாடும் அவைநேராம்
இவ்வாழ்வை இருக்கும் என்றே
கருதிமிக ஆசையுற்றாய் காசினியெ
லாங்குடைக்கீழ் காத்தல் போலக்
குரைகடல்சூழ் எழுதீவுக் காசைகொள்ளும்
பாழ்நெஞ்சே குருவின் தாளில்
சரணமென அடைவதென்று புவிமயக்கிற்
சிக்கி நொந்து தவிக்கின்றாயே. 9

இரவு...நேராம்-இராக்கூத்தை ஒக்கும்; காசினி-உலகு; எழுதீவு-ஏழுகண்டங்கள் (நாவல், இறலி, குசை, கிரவுஞ்சம், புட்கரம், தெங்கு, கமுகு என்ற இவ்வெழுவகைப் பொருளும் அவ்வத்தீவின் மிக்கனவாகையால் இப்பெயர் பெற்றது); சரணம்-புகலிடம்.

வாங்குகடல் சூழ்புவியைப் பொதுவறவே
ஆண்டுமென மகிழ்ந்து சீர்த்தி
ஓங்குவளம் பெற்றிருந்தும் கடல்கடக்க
ஓடிடினும் ஓடு கையில்
தாங்கியிரந் துண்டிருந்தும் ஒருசாணின்
உதரபசி தணிக்க நளும்
ஏங்குவதால் உள்ளதுவே போதுமெனில்
ஆசையறும் இணங்காய் நெஞ்சே. 10

வாங்கு - வளைவு, நீளம்; பொதுவறவே - தமக்கே உரித்தாய்; உதரபசி-வயிற்றுப்பசி; உயிர்ப்பசி மூன்றில் ஒன்று (உதரம்-அடிவயிறு); இணங்காய்-ஆசைக்கு உடனாகாதே.

ஆசையெனும் அழுக்கதுன்மேல் அடைந்திருந்தால்
பரமகுரு அருள்நீ ராலே
மாசறவே கழுவாமல் மலமிகுத்த
வாழ்க்கையெனும் மண்டு சேற்றைப்
பூசியதில் அழுந்திநிதம் உழல்கின்றாய்
பாழ்நெஞ்சே பொங்கும் ஆசை
நாசமுறக் கருதிநிலை நாடாமல்
நலிந்தனையே நவிலக் கேண்மோ. 11

மண்டு-நெருங்கிய, நிறைந்த; நிலைநாடாமல்-குரு உபதேசத்தால் பெறப்படும் மேல் நிலைமை நாடாமல்; நலிந்தனையே-வாடினாயே; நவில-சொல்ல.

உன்னுடைய வாழ்வுதனக் குயர்ந்தோரைக்
கண்டுபற்றாய் உன்னி உன்னி
அன்னபடி வாழவென்றால் சாமளவும்
அலைவுற்றே அழன்று வாடி
இன்னல்அனு பவித்திடுவாய் நெஞ்சேநீ
சங்கற்பம் இகழ்ந்தே உன்றன்
பொன்னிலகு வாழ்வுதனில் தனித்தோரை
எண்ணிமகிழ் புரிந்தி டாயே. 12

அன்னபடி-அன்னோர் சொன்னபடி; வாழவென்றால்-வாழ வேண்டியன்; சாமளவும் - சாகுங்காலம் வரை; அலைவுற்று-அலைந்து; அழன்று வெம்மையடைந்து; சங்கற்பம் இகழ்ந்தே-எண்ணத்தை விட்டு; பொன்னிலகு வாழ்வு-ஒளிமயமான வாழ்வு.

வண்டறவே உனக்கமைத்த தல்லாமல்
அலைந்தாலும் வாரா தென்று
கண்டிருந்தும் அலைந்தனையே எனவுரைக்க
நெஞ்சகமும் கருதிக் கூறும்:
உண்டுடுத்துச் சுற்றமுடன் அன்பாக
வாழ்வதுவே உலகில் இன்பம்
கொண்டதன்மேல் ஆசையுற்றேன் என்வறிவு
சுற்றமது குழையக் கூறும். 13

வண்டறவே - குற்றமில்லாமல்; உனக்கமைத்தல்லாமல் - கர்மவினையின் பயனால் ஆஞ்ஞாபிக்கப்பட்டதல்லாமல் -அலைந்தனையே-அலைந்து திரிந்தாயே; கொண்டதன்மேல்-கொண்டு அதன் மேல் என்க.

கனகமிகும் பெருவாழ்வு சிறந்தவரைக்
கண்டோர்கள் கலந்து கூடித்
தனதுடைய சுற்றமென மகளை மணம்
புணர்ந்திடவே தருவார் வாழ்க்கைக்
கனமதுகெட் டிடின்பெற்றோர் பிறந்தோரும்
இகழ்ந்தவிதம் கண்டும் பற்றாய்த்
தினமவரைச் சுற்றமெனத் தியங்கினையே
நெஞ்சகமே செப்பக் கேண்மோ. 14

கனகமிகும்-தனமுடைய; தியங்கினையே-மயக்கம் கொண்டாயே; நெஞ்சகமே-மனமே அறிவுக்கிடமாய மனமே; செப்பக் கேண்மோ-சொல்லக் கேளாய்.

பழுத்தமரந் தனிற்பறவை நிறைந்திருந்து
பழமோயப் பறந்த தேபோல்
கொழித்தநிதி சிறுத்தவுடன் சுற்றமகன்
றிடுமல்லால் கூடு மோமண்
வழுத்த மன்னர் முடிதாழப் புவியாண்டோர்
இரந்துண்டு வாடும் போதில்
அழுத்தமுடன் ஆதரித்த சுற்றமுண்டோ
நிலையற்றே அலைந்த நெஞ்சே. 15

பழமோய-பழம் ஒய்ந்தபின்; (காலம் மாறியபின்); மண் வழுத்த-உலகம் புகழ்ந்து போற்ற; மன்னர் முடிதாழ-குறுநில மன்னர் பலர் தம் கிரீடம் தாழும்படி பணிய; புவியாண்டோர்-பூலோகத்தை ஆண்ட பெருமன்னர்.

தந்தை அன்னை சுற்றமொடு தனயர்களும்
மடந்தையரும் தரணி தன்னில்
சுந்தரமாய் நெருங்கியிடப் புவியாளப்
பெற்றாலும் சொல்லொ ணாத
அந்தமடி நடுவாகும் அருள்மவுனப்
பரஞ்சுடரின் அமைப்பு நீங்கி
இந்தவுடல் இறந்திடும்போ தெவராலென்
இதம்பெறுவாய் ஏழை நெஞ்சே. 16

தனயர்-மைந்தர்; மடந்தை-பெண்டிர்; சுந்தரமாய்-சொகுசாய்; அந்தம்-அடி; நடுவாகும் அருள் மவுனப் பரஞ்சுடரின் அமைப்பு நீங்கி-அந்தம் ஆதி இடை என்றொன்றும் அழியாது நிற்கும் அந்தரியாமியாகவும், அந்தரங்கமாகவும் உள்ள சித் சொரூபியமான இறைவனருளால் தரப்பட்ட ஆவி நீங்கி, இந்த உடலான தனு இறைவன் அருளால் மலங்கழிக்க அருளப்பட்டதென்ற சாத்திரக் கொள்கை ஈண்டு பேசப்படுகிறது. பரஞ்சுடர்-எங்கும் வியாபியாயிருந்து பிரகாசிக்கும் தனிப்பொருள். என்இதம் பெறுவாய்-என்ன இதம் (ஆறுதல்) பெறுவாய்; ஏழை நெஞ்சே-அறிவற்ற மனமே.

குலமென்றும் சுற்றமென்றும் மகனென்றும்
மனைவியென்றும் கூட்டம் எல்லாம்
அலமந்த கற்பனையால் அல்கலுற்ற
தல்லாமல் ஆவ துண்டோ
மலமென்ற மாயையிதில் எவரிருந்தென்
எவரழிந்தென் மடமை நெஞ்சே
பலனுண்டோ சுற்றமதால் பரமசுகம்
அடைவதுண்டோ பகர்ந்தி டாயே, 17

அலமந்த கற்பனை-கலக்கமுறும் பொய்; அல்கல்-வறுமை, குறைவு; மலமென்ற மாயை-மும்மலங்களில் ஒன்றான மாயை, அதாவது தத்துவ சம்பந்தம்; எவரிருந்தென், எவரழிந்தென்-இந்த மாயையில் இருத்தலும் அழிதலும் சொப்பனம் போன்றது: போக்கும் வரவும் சுழன்று வருவது; சுற்றமதால் பரமசுகம் அடைவதுண்டோ-மனைவி மக்களால் பேரின்பம் அடைவதுண்டோ? இல்லை என்றவாறு.

அத்துவித நிலையாகிப் பூரணமாய்
நிட்களமாய் அறிவாய் மோன
தத்துவமாய்ச் சுழுமுனையில் கற்பூர
தீபமெனச் சார்ந்தே ஓங்கும்
நித்தியத்தைச் சுற்றமென நெருங்கியதிற்
சேராமல் நில்லா வாழ்வை
ஒத்தபெருஞ் சுற்றமென அலைந்தனையே
எனநெஞ்சம் உரைக்கும் அன்றே 18

அத்துவித நிலையாகி-இறைவனோடு அந்நியமின்றிக் கலந்து நின்று; பூரணமாய்-நிறைவுடையதாய்; நிட்களமாய்-உருவ மில்லாமல்; அறிவாய்-சித்தாய்; மோனதத்துவமாய்-சுத்தசாத்து விகமாய்; சுழுமுனையில் கற்பூர தீபமென சார்ந்தே-மூலாதாரத் திலிருந்து உச்சித்துவாரம் எழும் நாடியின் உச்சியில்எழும் ஒளியில் கலந்து; ஓங்கு நித்தியத்தை - உயர்ந்த மாறிலா நிலையை; சுற்றமென நெருங்கி - பேதமின்றி நின்று; அதில் சேராமல்; அதில் கலந்து நில்லாது; வாழ்வை ஒத்த பெருஞ் சுற்றமென அலைந்தனையே-இந்த வாழ்வைத் தனக்கு ஒத்த உறவு என மயங்கி அலைந்தனையே.

என்னுடைய குலத்தோரைச்சுற்றமல
எனவுரைத்தே இகழ்ந்தாய் மாந்தர்
சொன்னமொழி புகழ்வேண்டின் சுற்றமடை
கெனவிருப்பச் சுற்றந் தன்னைச்
சின்னமிது நிலையல்ல எனத்துறந்தால்
புகழ்வாரார் செப்பும் என்ற
தன்நிகரில் தீமைநெஞ்சுக் கெதிராக
அறிவுமொழி சாற்றும் அம்மா. 19

என்னுடைய ...... இகழ்ந்தாய் - நன்மக்களைச் சுற்ற மல்லவென இகழ்ந்தாய்; மாந்தர் சுற்றமடைகென - முகமன் கூறுவோரைச் சுற்றமெனக் கொண்டு; சுற்றந்தன்னைச் சின்ன மிது நிலையல்ல வெனத்துறந்தால் புகழ்வாரார் செப்பும் - மனைவி மக்களாய்ச் சுற்றம் சதமில்லாத சின்னங்கள் எனத் துறந்தோரைப் புகழ்பவர் யார், சொல்லு; தன்னிக ரில் ... அம்மா-தனக்குத் தானே உவமிமில்லாத மடநெஞ்சுக்கு அறிவு பேசுகிறது.

பெருமையொடு புகழ்வேண்டின் பொருள்வேண்டும்
பொருள்ஈட்டிப் பேண வென்றால்
அருமைகெடும் படிசிறியோர்க் காளாகி
ஏவல்புரிந் தலைந்து நொந்தே
இருவகைக்குள் மருண்டுபொருள் ஈட்டியிசை
படைப்பதுவாய் இசையும் மற்றப்
பெரும்புகழ்கள் வருமுன்னம் வருஞ்சிறுமை
அறிந்திலையோ பேதை நெஞ்சே. 20

அருமைகெடும்படி - சிறப்புக்கெடும் வகை; சிறியோருக் காளாகி - உலகத்து அற்பர்கட்கு அடிமையாகி; இருவகைக் குள் மருண்டு - புண்ணிய பாவம் இவைகட்கிடையே மயங்கி; இசை படைப்பதுவாய் இசையுமன்றே - புகழ் உண்டாக்கிக் கொள்வதிலேயே வாழ்நாள் அமையும்; அப்பெரும் புகழ்கள் ... அறிந்திலையோ - அப்படிப் பெரியபுகழ் வரினும் இடையே எத்தனை சிறுமைகள் வரும் அறியாயோ?

பரமகுரு வருள்நிலையில் பிணம்போலக்
கிடந்துசகப் பாங்கை நீங்கி
உரமுடனே சுகவடிவாய்க் கிடப்பதல்லால்
இப்புகழால் ஊக்கம் உண்டோ
பெருமயக்கம் உலகிலமுந் திடுமவர்வாய்ப்
புகழ்மிகவும் பெருமை யென்றே
வருமயக்கில் சிக்கிநெஞ்சே அலைந்துழன்றும்
மடங்காமல் வாதுற் றாயே. 21

பரமகுருவருள் நிலை - இறைவன் குருமூர்த்தமாய் வரும்சத்திநிபாதநிலை; சகப்பாங்கு - உலகப்பற்று; உரமுடனே- திடமாக; பிணம்போலக் கிடந்து - இந்திரியச் சேட்டைகளை அடக்கி; சுகவடிவாய் - சுத்தநிலையில் பிரணவ ரூபியாய்; இருள், மருள், பிரணவம், அருள் என்ற நான்கு நிலைகளுள் மூன்றாவதாய் (சுத்தசாதகம்' காண்க); கிடத்தல் - ஆங்காரம் அடங்கி அருள்நாடி நிற்றல்; ஊக்கமுண்டோ - உயர்ச்சி அல்லது வலி உண்டா? அழுந்திடுவார் - தோய்ந்திடுவார்; வருமயக்கில் - இடைவிடாது தாக்கும் மயக்கத்தில்; மடங்காமல் - மீளாமல் தணியாமல்; வாதுற்றாயே - தருக்கம் செய்கிறாயே.

நில்லாத வாழ்வதனை நிலையென்று
சகமயக்கை நிசமென் றெண்ணிப்
பொல்லாத புகழ்வேண்டி வருத்தமுற்றாய்
நிலையதனாற் பொருந்த லாமோ
எல்லாரும் கண்டிடவே நாயேறி
ஓர்பெருமை எய்து மானால்
புல்லாண்மை யுள்ளநெஞ்சே புகழதனால்
பலம்பெற்றுப் பொருந்த லாமே. 22

நில்லாத......யென்று-யாக்கை நிலையாமையை உணராது; நிலைபதனாற் பொருந்தலாமோ-அந்த நிலையில் வீழலாமோ? நாய்ஏற்றி - நாயின் மேல் ஏறி; ஏறத்தகாத பிராணியின் மேல் ஏறி என்றபடி (நாய் நுகர விரும்புவது போல் உயிர் ஆணவ மலத்தால் புகழை நுகர விரும்பும்); புல்லாண்மை - அறிவின்மை.

பிரியாத பேரன்பால் புகழ்ந்தழைத்தால்
பரமசுகம் பெறுவதல்லால்
பரியாசத்துடன் இகழ்ந்து பரிகாரக்
கொலைக்கள்வன் பாவி என்றும்
கருதரிய கோளனிவன் எனப்புவியோர்
உரைத்ததனால் காணொணாத
துரியநடு நிலையான குருவருள்தான்
அகன்றிடுமோ சொல்லாய் நெஞ்சே. 23

பிரியாத ... தல்லால் - இறைவனைப் புகழ்ந்து - கருதரிய சுக நிலை பெறுவதல்லாது; கருதரிய கோளன் - எண்ணத்தகாத குற்றமுடையவன்; காணொணாத துரிய நடுநிலையான குருவருள் காணொணாததும் பேசொணாததுமான நிருவிகற்ப நிலையில்; குருவருள் தான் அகன்றிடுமோ - உலகம் பழித்தாலும் குருவருள் நீங்காது என்றபடி.

பொய்யாகும் புகழதன்மேல் ஆசைதனை
ஒழிந்திடெனப் பொருந்தி நெஞ்சம்
மையாருங் கடற்புவியிற் சொத்தமதாய்
நிலைமைபெற மண்மேல் இச்சை
ஐயாவென் றனைவிட்டு தெனமண்ணில்
ஆசையுற்றால் அதிலே நொந்து
மெய்யான தீறியாமல் அலைவாயென்
றறிவும் இனி விளம்பும் அன்றே. 24

பொய்யாகும் புகழ் - நிலைக்காத புகழ்; மையாருங் கடல் - கருமை நிறம் பொருந்திய கடல்; ஐயா - விளிச்சொல்.

குருதிதசை நரம்பெலும்பு தோல்குடல்சீ
நிணங்களெனும் கூட்டங் கூடி
மருவுபுழுக் கிடமாகும் இவ்வுடற்குச்
சொந்தமதா மண்ணை வேண்டித்
திரியலுற்றாய் உடல்மாண்டே எவ்விதமும்
மண்ணாகச் சேரும் என்றே
கருதிநிலை பெற்றிலையே மண்மனையே
சொந்தமெனக் கவரும் நெஞ்சே. 25

நிணங்கள் - கொழுப்பு; மருவு - பொருந்தும்; மண்ணை வேண்டி-மண்மேல் விளையாட்டில் ஆசை வைத்து; மாண்டே - செத்தே; எவ்விதமு மண்ணாகச் சேரும் - எவ்வகையாயினும் இறுதியில் மண்ணாவது திண்ணம்; மண்மனையே - உலக வாழ்வு.

புவிநிரம்பி நித்தியநின் மலவடிவாய்
நிர்க்குணமாய்ப் பொலிந்து மேலாய்த்
தவநெறியாய்ச் சமயமெலாம் தானாகும்
இறைநிலையாம் தடத்தந் தன்னில்
குவியவும் நீ சொக்கியது சொந்தமெனக்
குருவருளைக் குறித்தி டாமல்
அவனிதனில் மண்மனைமேல் ஆசையுற்றாய்
எனநெஞ்சம் அறையும் அன்றே. 26

புவி நிரம்பி - சர்வவியாபியாய்; நின்மல வடிவாய் - சொரூபலக்கணம்; நிர்க்குணம் - முக்குணத்துக்கு அதீதன்; சமயமெலாம் தானாகும்-அறுவகைச் சமயத்தும் ஆங்காங்கே நின்று; இறைநிலை-சகளீகரிக்கும் நிலை; தடத்தம் தன்னில் குவியவும்-இறங்கி நிற்கும் நிலை; தடத்த நிலையில் இறைவன் பல்வேறு திருமேனி கொள்வன்; திரோதனத்தில் குவித்தும் அனுக்கிரகத்தில் விகசித்தும் நிற்பான். நீ சொக்கியது-நீ சுசுப்தி நிலையில் கண்டது; சொந்தம் எனக் குருவருளைக் குறித் திராமல்-நேர்ந்த அனுபவம் உண்மை என உணர்ந்து குரு வருளை எண்ணாமல்; நெஞ்சம் அறையும்-நெஞ்சு சொல்லும்,

ஓதரிய வறுமையுறுங் காலமெய்தி
னால்உதவ ஓங்கு செம்பொன்
ஆதரமாப் புதைக்கவென்ற நெஞ்சையிகழ்ந்
தறிவுரைக்கும் அமல மோனப்
பூதரசிற் செயலையன்றிச் சீருளவோ
விரவிமதி பொருந்து நாளிற்
சீதமதி நலம்பெருகக் குடசலத்தில்
இந்துசிறை செய்த தாமே. 27

ஆதரமாய்-ஆதரவாய்; அமலமோன பூதர சிற் செயலை-மலைபோன்ற மலமற்ற சித்செயலாகிய சமாதிநிலை; சீருளவோ-வேறு பேறு உள்வோ? விரவிமதி பொருந்தும் நாளில்-சித்தம் அடங்கும் அவத்தையில்; சீதமதி-குளிர்ந்த சந்திரன்; குடசலத்தில்-குடத்திலுள்ள நீரில்; இந்து சிறை செய்ததாமே-சந்திரன் பிடிபட்டாற் போலுமே. (இறைவன் தடத்த நிலையில் அவன் சொரூப நிலை எங்கும் பிரகாசமாக நிற்க, சித்தத்தில் சிறைபடுகிறான் என்றவாறு).

தீவினைநல் வினையனைத்தும் தானாகி
நின்றதொரு தெய்வம் தானே
மேவியொரு தன்வறுமைத் துயரமுறத்
திருவுளத்தில் விரும்புங் காலைத்
தாவியதோர் துன்பமுற்றுத் தளர்வதல்லால்
சுகமடையத் தகுமோ வீட்டில்
ஆவலுடன் புதைத்த பொருள் ஆனையுண்ட
விளங்கனிய தாகும் நெஞ்சே. 28

தீவினை.........தானாகி - நல்லதுமாய் தீயதுமாய், (லயம் போகம் அதிகாரம் என்ற மூன்றில் இறைவன் இருவினைக்கும் அதிகாரியாகிறான்); தாவிய-நீட்டிய. பரந்த; ஆனையுண்ட விளங்கனி-யானை உண்ட விளாம்பழம்; யானை நோய் பற்றப் பட்டால் உட்பழத்தை அருந்தி ஓட்டை அவ்வகையே விட்டுவிடும் என்ற செய்தி ஈண்டுக் கூறியது. அதாவது வீட்டில் புதைத்து வைத்த பொருள் சத்தற்றதாகும்; பயன்படாது என்றவாறு.

இனிப்பொசிக்க வேண்டுமென ஆசையிலா
தீப்பொசிப்ப தென்ன நீயும்
தனிப்பொருளின் அமைப்பதனாற் கிட்டுவதை
உண்டுபசி தணித்தி டாமல்
அனிச்சமலர் வனந்தோறும் அலைந்துகொடுந்
தேனீக்கள் அருந்தேன் ஈட்டிக்
குனித்தசிலை வேடனுக்குக் கொடுப்பதுபோல்
பொருளீட்டக் குறித்தாய் நெஞ்சே. 29

ஆசையிலாது ஈப் பொசிப்பது - விருப்பமின்றியே ஈக்கள் உண்பது; அமைப்பு-திட்டம், விதி: அனிச்சமலர்-அனிச்சப்பூ; தேன் ஈட்டி - தேனைச் சேர்த்து; குனித்தசிலை-வளைந்த வில் (இந்த உதாரணத்தின் பொருள் வெளிப்படை).

காசினியில் வெறுப்புடனே கடல்நடுவில்
விட்டிடினும் கனகச் செம்பொன்
நேசமுற உரிமையொடும் உனைச்சேரும்
உனக்குரித்தாய் நெருங்குங் காலை
ஆசையுடன் பொருள்புதைத்துப் பொன்காத்த
பூதமென அருகில் நின்றும்
நாசமுறுங் காலம் வந்தால் அழிந்திடுமென்
றுரைக்க நெஞ்சு நவில்வ தன்றே. 30

கடல்நடுவில்-நடுக்கடலில்; பொன்காத்த பூதம்-பொன்னைக் காவல் செய்யும் பூதம்; அருகில் நின்றும்-அங்கே நின்று காத்தல் செய்யினும்; நாசமுறுங் காலம்-போங்காலம்.

குடும்பமெனும் சமுசாரக் கூட்டமஃ
தென்றனையே குறித்து நம்பித்
திடம்பெறலாம் எனவிருக்க அதுதனையே
காக்கநிதம் திகைத்தேன் என்றே
அடர்ந்தநெஞ்சம் உரைத்திடவே சமுசாரக்
கடலதனில் அழுந்தித் துன்பம்
படர்ந்ததனை தளைத்தளைதுக் கொண்டாயென்
றறிவுமினிப் பகரும் அன்றே. 31

நிதம்-தினமும்; அடர்ந்த நெஞ்சம்-வருந்திய மனம்; படர்ந்த தளை தளைத்தனைத்து சமுசாரம் என்ற கட்டு மேலும்மேலும் பெருகி; மும்முறை 'தளை' எனக் கூறியது இந்தப் பந்தத்தினை வலியுறுத்துதற்கு.

அடுத்தவரைக் காக்க நித்தம் அல்கலுற்றேன்
 என்றநெஞ்சே ஆவி மாண்டு
படுத்துவிடின் காப்பாயோ எனவிருக்கும்
 அளவவரைப் பரிந்து காக்கத்
தொடுத்தாசை யுற்றிற்றினை அறிவுரைக்கும்
 பிணியிடரின் அலதோர் வேளைக்
கெடுத்தரசர் சிறையிடினும் காப்பாயோ
 எனநெஞ்சம் கிளத்தும் அன்றே. 32

அல்கல்-தங்குதல், வாழ்தல்; ஆவிமாண்டு படுத்து விடின்-உயிர் நீங்கி உடல் விழுந்துவிட்டால்; இருக்கும் அளவவரை-இருக்கும் அளவு அவரை ('அவர்' என்றது உயர்வு நவிற்சி), பிணி-நோய்; அலது-அல்லது; வேளை-காலம், கிளத்தும்-சொல்லும்.

வக்கணையாய் வெகுசமர்த்தாய் உரைத்தாயென்
 குடும்பமதை வண்மை யாகப்
பக்குவமாய்க் காக்கவெனை யல்லாமல்
 ஒருவருண்டோ பகராய் என்ன
அக்கணமே அதிசயித்தே அறிவுரைக்கும்
 மலரின்மண மாக எங்கும்
புக்குவுயிர் களைக்காக்க இறையிருப்ப
 தறியாமல் புகல்கின் றாயே. 33

வக்கணையாய்-நாகரிகமாய்; உபசாரமாய்; சமர்த்தாய்-வல்லபமாய்; மலரின்மணம்...இறையிருப்ப - மலரில் மணம் கூடிநிற்பது போல் உயிர்களைக் காக்க இறைவன் ஒருவன் உளன் என்றபடி.

கோபுரத்தில் அமைத்துவைத்த பொற்பாவை
கோபுரந்தோட் கொண்டு தாங்கிச்
சோபமுற்ற தெனக்கூனி யிருப்பதொக்கும்
நெஞ்சேநீ சொன்ன நீர்மை
தாபரத்தோ டனையமற் றுயிர்களையும்
காத்துநிலைச் சார்பு நல்கத்
தீபவொளி யெனத்தேசோ மயமிருப்ப
தறியாமல் திகைக்கின் றாயே. 34

பொற்பாவை-அழகிய பொம்மை; சோபமுற்றதென-வருத்த முற்றதென்று; கூனியிருப்பதொக்கும் - குனிந்து இருப்பதற்கு ஒப்பாகும்; நீர்மை-குணம், இயதி; தாபரம்-செடி கொடி முதலிய அசரங்கள்; நிலைச்சார்பு நல்க-அவ்வவ்வுயிர்கள் எடுத்த பயனைப் பெற; தீபவொளி யெனத் தேசோ மயமாயிருப்ப-உயிருக்குயிராய் விளங்கிக் காத்து நிற்க அது அறியாமல் திகைக்கின்றாயே-அதனை அறியாமல் மயக்கமுறுகிறாயே.

பருத்தமலைக் குள்தேரை உண்டாக்கி
ஆகாரம் புருக நல்கி
வருத்தமறக் காத்தளிக்கும் நிட்களமுன்
குடும்பமதை வளர்க்கும் என்று
கருத்தில்நினைந் திருக்காமல் காசினியில்
ஐயுறவாற் கலங்கி நொந்து
செருச் செய்வார் போலடர்த்த துயர்க்கானாய்
என்றிடவே செப்பும் நெஞ்சம். 35

மலைக்குள்தேரை — கல்லினுள் வாழும்தேரை; செரு - போர்; அடர்த்த துயர்-நெருங்கிய வருத்தம், மிகுந்த வருத்தம்.

எனையடுத்த பேர்களுக்கா ஏதுமுற்று
வருந்துவதை நெகிழ்ந்தீர் பெறுத்தக்
கனதனத்தை யுடையோரை அடுத்தவராமல்
யான்விழைந்தக் கருத்தில் உற்றுத்
தினம் அலைந்தேன் என்கின்ற நெஞ்சமதைக்
குறித்தறிவு செப்பும் உன்றன்
இனமதெலாம் சுத்தமுற ஏதுவுரைத்தும்
தெரிந்திலையே ஏழை நெஞ்சே. 36

ஏதம் - துன்பம், கவலை; இனம் - சுற்றம், சுத்தமுற - தூய்மை அடைய; கிலேசமற.

மன்னுமெழிற் பசுங்கிள்ளை இல்வதனைக்
காத்துமனம் மலைந்த தென்னப்
பொன்னுடையோர் தமைக்காத்துப் புல்லறிவோர்
அலைந்துலைந்து போவர் நாளும்
தன்னிகரி லாவறிவோர் சற்குருவின்
பதம்போற்றித் தனித்தா னந்த
இன்னமுதம் உண்புறென அறிவுரைக்க
நெஞ்சமினி ஏங்கிக் கூறும். 37

பசுங்கிள்ளை - பச்சைக்கிளி; இல்வம் - இலவ மரம்; மன மலைந்து - இலவம்காய் பழுத்தால் அருந்தலாமென்று எண்ணி ஏமாறுதல் அடைந்து (பழுத்தால் வெடித்து பஞ்சுதான் வெளியாகும்). உலைந்து போவர் - கெட்டுப் போவர்.

பொருளுடைய வேந்தர்தமை அடுப்பதனை
இகழ்ந்தீர்யான் பொசிப்ப தற்கே
அருளுடன்நல் அன்னமது நல்குவரார்
எனநெஞ்சம் அறைந்த காலை
உரமறிந்தா யில்லைவன விலங்கினுக்கும்
பறவைமுதல் உயிர்கட் கெல்லாம்
பருகவுண வருளுமந்த நிலையறியாய்
என்றறிவு பகரும் அன்றே. 38

அன்னம் - சோறு; அறைந்த - சொன்ன; உரம் - திண்மை.

அரவுதனக் கமுதளித்து வளர்த்தும்உல
குயிர்தனக்கும் அன்பாய் அன்னம்
பருகவருள் புரிந்துகடற் பலவுயிர்க்கும்
உணவருளிப் பண்பாய் நின்று
தருநெருங்கும் பருவனத்தின் மரந்தனக்கும்
தாரகமாய்த் தண்ணீர் நல்கி
அருமையொடு வளர்த்திடுநற் பொருள்இருக்க
உழன்றனையே அலையும் நெஞ்சே. 39.

அரவு-பாம்பு; கடற்பல வுயிர்க்கு-கடலிலுள்ள மீன் முதலிய சீவராசிகட்கு; தரு-மரம்: தாரகம்-சார்பு, ஆதாரம்; நற்பொருள்-இறைவன்; சார்புகொள்ளத்தக்க பொருள்.

முட்டையினுட் குஞ்சினுக்கும் அமுதீந்து
வளர்த்துமொய்த்த தளிர்க்குச் சாயம்
திட்டமுடன் இட்டுவளர் தெங்கினுக்குள்
நீரருளிச் சேணீர் மீனின்
குட்டிதனக் குள்ளிருக்கும் முள்தனக்குக்
கூர்மைதனைக் கொடுத்து மோன
வெட்டவெளி யாயபரஞ் சுடரிருக்க
வீணாக மெலிந்தாய் நெஞ்சே. 40

மொய்த்ததளிர் - நெருங்கிய இளந்தளிர்; சாயம்-வண்ணம்; தெங்கு-தென்னை; சேணீர் மீனின்-ஆழ் நீரிலுள்ள மீனின்; உள்ளிருக்கும்முள் - உடம்பினுள்ளாக உள்ள எலும்பு; மோன வெட்ட வெளியாய பரஞ்சுடர் - விந்து தத்துவமாய் இருந்து பின் எல்லா சக்திகளையும் பிரேரேபித்து காக்கும் கடவுள்.

கரையற்ற உவராழிக் காசினியைக்
காக்கவைத்துக் காரின் கூட்டம்
விரைவாகப் பொழிந்துலகு செழித்திடவே
அமைத்துவைத்து வெளியில் நித்தம்
இரவிமதி கதிமாறா திலங்கவைத்து
மலப்பீற்றல் இருக்கும் கூட்டில்
பரிவாக ஐம்பூதம் வாழவைத்த
பொருளிருக்கப் பயமென் நெஞ்சே. 41

உவராழி - உப்புக்கடல்; காரின் கூட்டம் - மேகங்களின் கூட்டம்; பொழிந்து - மாரியாகப் பொழிந்து; வெளியில் - வான வீதியில்; கதி மாறாது - சொல்லவேண்டிய பாதை மாறாமல்; இலங்க - பிரகாசிக்க; மலப்பீற்றல் கூட்டில் - மலம் கழிந்து வரும் உடம்பெனும் கூடு. ஐம்புதம் - நிலம் நீர், தீ, காற்று, விசும்பு, பொருள் - சிவனெனும் செம்பொருள்.

விந்துவெனும் நீரதனை உருவாக்கிக்
கருப்பமதில் விரும்பிக் காத்துத்
தந்திரமாப் புவியில்வரத் தயவுபுரிந்
திவ்வளவும் தனித்துக் காத்த
அந்தமிலா இறையிருக்க அலைகின்றாய்
என்றிடவே அறையும் பாசச்
சிந்தையற்றேன் உதரபசிக் கென்செய்வேன்
எனவறிவு செப்பும் அன்றே. 42

விந்து - தாது, இந்திரியம்; கருப்பம் - தாயின் வயிறு; விரும்பி - நியதியாக; தந்திரமாய் - உபாயமாக; இவ்வளவுந் தனித்துக் காத்த - இந்த நிலைகளிலெல்லாம், தனித்துத் தோன்றாத் துணையாய் இருந்து காப்பாற்றிய; பாசச் சிந்தை - யானென், எனது என்ற கட்டுகளால் கட்டுப்பட்ட மனம்; உதர பசி - அடிவயிற்றுப் பசி.

கனிகளில் உள்ளபல அகங்களெலாம்
வளர்ந்திருக்கக் கருதும் வேளை
நேசமற்ற பரிகலங்கள் இருக்க அருஞ்
சுவைக்கனியாய் நெருங்கி ஓங்கும்
பாசிலையின் மரங்கள் தழைத் திருக்க நீர்
படர்ந்திருக்கப் பரிவா யானும்
பூசிக்கும் பரமகுரு அருளிருக்கத்
தவிப்புதென்னோ புகலாய் நெஞ்சே. 43

அகங்கள் - வீடுகள் (ஆன்மாக்கள்); பரிகலங்கள் - உண்கலங்கள்; பாசிலை - பச்சை இலை; பரமகுரு - தான் பூசிக்கும் சிவனெனும் முதற்குரு.

அத்துவிதப் பரமகுரு அருளிருக்கப்
பொருளிருக்க அன்பா யாரும்
சுத்தமுற உடுத்துதற்கு விரக்தியெனுந்
தூசிருக்கத் துயில்வதற்கே
அத்தமுடை யோரமைத்த புறத்திண்ணை
பலவிருக்க அகிலந் தன்னில்
எத்தகைமைச் சாதியினும் இரந்துண்ணத்
துணிவிருக்க இளைப்ப தென்னோ 44

அத்துவிதப் பரமகுரு - குருவாய் வந்து உடனாகிய அருளும் குரும் அருளிருக்கப் பொருளிருக்க - அருளாகிய பொருள் இருக்க; விரத்தி - துறவு, வைராக்கியம்; தூசு-சீலை; அத்தமுடையோர் - பணமுடையோர்; புறந் திண்ணை - வீட்டின் வெளித் திண்ணை; துணிவு-உளத்திண்மை.

திருவோடாம் நிதியிருக்கத் திகைப்பதென்னோ
வென்றிடத் தீஞ்சுவையாய் அன்னம்
பரிவாக ஈகுவரோ என்ற சஞ்சலமேன்
நாவளவே பண்புற் றப்பால்
விரைவாக அசக்கியமாய் மலமாவ
தறிந்திலையோ என்னே அவ்வன்னம்
பிரிவான பேதமுள தென்றறிந்தும்
ஐயமறப் பேசும் அன்றே 45

திருவோடு - பிச்சை ஏற்கும் ஓடு, வென்றிட - பசியை வெல்ல; தீஞ்சுவையாம் ஈகுவரோ - யாராயினும் பரிவோடு கொடுப்பரோ; பண்புற்று + அப்பால் - அளைதிலுற்று அப்பால்; அசக்கியமாம் மலமாவது - அருவருக்கும் படியான மலமாக மாறுவது; அறிந்திலையோ - சிந்தித்துப் பார்க்கில் அறியாயோ? அவ்வன்னம் பிரிவான பேதமுளது - அன்னமும் விகாரியாகும் தன்மையுடையது; ஐயமற சந்தேகமின்றி.

சாதிதனில் உயர்ந்தோர்கள் உடல் அன்ன
மயமென்னில் தாழ்ந்தோர்க் கந்த
நீதியாம் அலதுசயி தன்னியமென்
றிடில் அதுவாய் நிற்கும் என்னில்
பேதமுறு மோகனக பாத்திரத்து
நீரினிலே பிருதி தோன்றுஞ்
சோதிகதி ரவன் வேறோ அங்கணத்திற்
பிருதியுற்ற சுடர்தான் வேறோ? 46

சாதியினில் ......... அந்த நீதியே - உயர்ந்தோராயினும் தாழ்ந்தோராயினும் உடல் ஒன்று போல் அன்னமயம் என்ற ஒரே நீதியே; சயிதன்னியம் ......... பேதமுறுமோ - ஆனால் சைதன்யம் என்னும் அறிவோ பேதமுறாது; எல்லா உயிர்களும்

ஒன்று போல 'த்' பொருள் என்றபடி, கனகபாத்திரம் - பொன் பாத்திரம்; பிருதி - எதிரொளி அங்கணம் - சலதாரை. பிருதி யுற்ற - பிரதிபிம்பித்த; சுடர் - சூரியன்; பிம்பமான சூரியனும், பல இடங்களில் காணப்படும் பிரதிபிம்பமும் விகாரமடை வதில்லை; (அநேக ஈசுர வாதமும் உடல் சம்பத்தால் ஆத்து மாவுக்கு உயர்வு தாழ்வு பிரதிபாதிக்கும் வாதமும் நிராகரிக்கப் பட்டது).

கொக்கதனிற் குக்குடந்தான் கூடியிடில்
அண்டமது குறிக்கு மோசொல்
பக்குவத்திற் கடைசியரைப் பாங்காக
வேதியர்கள் பரிந்து கூடின்
தக்க்விந்து தரியாதோ சுடலை தனில்
சுடுநாற்றந் தான்வே றுண்டோ?
மிக்கவுரை ஆதியந்தம் பேதமுண்டோ?
எனநெஞ்சம் விளிம்பும் அன்றே 47

கொக்கு - நீண்ட அலகுடைய வெண்ணிறப் பறவை; குக்குடம் - கோழி; கூடியிடில்-கூடினால்; அண்டமது குறிக்குமோ-முட்டை வெளிப்படுத்துமோ; பக்குவத்தில் - பக்குவம் அடைந்த கடைசியரை - கடைச்சாதிப் பெண்களை; பாங்காக - முறையாக; வேதியர்கள் - வேதமோதுபவர்கள்; பரிந்து ஆசையுடன்; கூடில்-புணர்ந்தால்; தக்கவிந்து தரியாதோ-இந்திரியத்தால் கருத்தரிக்காதோ? (தரிக்கும் என்றபடி); சுடலை-சுடுகாடு; சுடுநாற்றந்தான் வேறுண்டோ-எந்த சாதியினராயினும், செத்தவுடலைச் சுடும் போது ஒரேவிதமான துர்நாற்றமே; மிக்க உரை-மேலும் கேட்கப்புகின்; ஆதிஅந்தம் பேதமுண்டோ-பிறப்பிலும், இறப்பிலும் யாவரும் ஒரு தன்மையானவரே; பேதமில்லை.

புலன்பொறிகள் வேண்டியதற் காசையுற்றேன்
எனவறிவு புகலும் தும்பி
மலைந்துமிக நாசியினான் மான்காதி
னான்மீன்கள் வாயி னானும்
அலர்ந்தகனற் கண்டவிட்டிற் கண்ணானும்
கரிபரிசம் அடைத லானும்
பலன்பெறவே நினைத்திறந்த என்றிடவே
நெஞ்சம்இனிப் பகரும் அன்றே. 48

புலன்-சுவை, ஒளி,. ஊறு, ஓசை, நாற்றம்: பொறி-மெய் வாய், கண், மூக்கு, செவி; தும்பிமலைந்துமிக நாசியினால்-தும்பி ஏமாந்து தன் மூக்கினால் நாசமடையும்; மான் காதினால்-மான் ஒலியைக் கேட்டு நாசமடையும்; மீன்கள் வாயினால்.மீன்கள் தூண்டிலிலுள்ள இரைக்கு வாய் திறந்து நாசமடையும்; அலர்ந்த கனல் கண்டு விட்டில் கண்ணானும்-விட்டில் பூச்சி தீப ஒளியைக் கண்ணால் கண்டு அதில் வீழ்ந்து மாயும்; பலன் பெறவே நினைத்து-இன்பம் பெறலாமென எண்ணி ஏமாந்து இறக்கும்.

எப்பொழுதும் பொறிபுலனுக் கேற்றசுபா
வீகமதை இருந்து நேர்மை
செப்பும்என அறிவுரைக்கும் மனமேயுன்
விருத்தியதில் சேர்ந்த தாலே
அப்புலந்தான் களங்கமுற லாச்சந்த
விருத்தியினை அடக்கிக் கட்டித்
தப்பவிடா திருந்திடவே சகமயக்கில்
பொறிபுலன்கள் சாரா அன்றே 49

சுபாவீகம்-இயல்பை; இருந்து-நடுவுநிலைமையாக இருந்து; மனமே உன் விருத்தி அதில் சேர்ந்ததாலே அப்புலந்தான் களங்க முறலாச்சு-மனத்தை அடக்கில் புலன்கள் திங்கை விளைவிக்காது என்றபடி விருத்தியினை அடக்கிக்கட்டி. சாராவன்றே-மனத்தின் பிரவிர்த்தியை (வெளித்தாவுதல்) அடக்கினால் (பொறிபுலன்கள் அடங்கி நிவர்த்தி மார்க்கத்தில் செல்லலாம் என்றபடி 'ஐம்புலன் கள் செற்று மோனிகளாய் முனிச்செல்வர் தனித்திருந்து தவம் புரியும் முதுகுன்றமே' (தேவாரம்)

மனம்வியந்து விருத்திதனை அடக்குவதெப்
படியெனவே மற்றொன் றைத்தான்
நினைந்ததனில் அழுந்துமப்போ தெதிர்தோன்றும்
பொருளுணரா நெறிபோல் நீயும்
கனத்தநினை வினைப்பரம குருபதத்தில்
உறப்புலன்கள் கட்டா யென்ன
எனைப்புரக்க மகவாசைக் கிசைந்தெனென்ற
நெஞ்சையிகழ் தியம்பும் அன்றே 50

வியந்து-பாராட்டி; ஆசைப்பட்டு, மனம்......பொருளுணரா-மனதை எப்படி அடக்குவது என வினவில், மற்றொன்றை நினைந்து அதில் அழுந்தியிருக்கும்போது, எதிரில் தோன்றும் பொருளை மனம் உணராது. அதுபோல், கனத்த நினைவினை-ஆழ்ந்த சிந்தனையை; பரமகுருபதத்தில் உற-சிவபிரான் பாதத்தில் வைக்க.

நதிதனிலே விரைந்துவரு நீருடன்அம்
மணலுறவாய் நம்பி நாளும்
அதிகவுற வெனநினைந்த தொக்கும்மக
வாசைமிக அன்ப தாமோ
ததிகடைந்த வெண்ணெய்தனை அம்மோரிற்
கலந்துவிடிற் சார்கி லாபோல்
சதியிசைந்த நெஞ்சேநல் தந்தைமக்
களுங்கலந்தும் சார்கி லாரே. 51

நதிதனில்-நினைந்ததொக்கும்-நதியில் வரும் பிரவாகத்தில் மணல் உறவு கொண்டு சேர்ந்தாலும் கரைந்து போவதை ஒக்கும்; மணலுக்கு ஆதாரமல்ல என்றபடி. மகவாசை மிக அன்பதாமோ-அதுபோல் மக்களின் பற்றும் சதமல்ல. ததிகடைந்த. சார்கிலா போல்-மோரில் கடைந்தெடுத்துவிட்ட வெண்ணெயை மீண்டும் மோரில் போட்டால் கலப்பதில்லையானாற்போல; சதி இசைந்த நெஞ்சே-மோசத்துக்கு இடம் தரும் நெஞ்சே; நல்தந்தை... சார்கிலரே-பெற்றோரும் மக்களும் சார்பு இல்லை என்றபடி.

அந்தியத்தின் மகவுதவி வேண்டுமென
ஆசையுற்றே அலைந்தாய் மாயப்
பந்தமல்லல் சுவிருந்தென் உயிரொடுங்கிப்
புலன்கலங்கிப் பதைக்கும் போது
சுந்தரசிற் பரமகுரு சொன்னிலைபோல்
மயக்கறுக்குந் துணிவுண் டாமோ
சிந்தையுற்ற நெஞ்சேயென் றறிவுரைக்க
நெஞ்சம்இனிச் செப்பும் அன்றே. 52

அந்தியத்தின்... ஆசையுற்றே அலைந்தாய்-அந்திம காலத்தில் பெற்ற பிள்ளை உதவி வேண்டுமென அலைந்தாய்; மாயப் பந்தமல்லல் எவரிருந்தென்-மாயப்பந்தத்தால் வரும் அல்லல்யார் இருந்தாலும் விடாது. உயிரொடுங்கி...பதைக்கும்போது-பொறி கலங்கி மதிமயங்கி ஐம்மேலுந்தி அழியும் வேளையில்; சுந்தர சிற்பரமகுரு சொல் நிலைபோல்-அழகிய ஞானகுரு உபதேசித்த நிலையல்லாது; மயக்கறுக்கும் துணிவுண்டாமோ-மயக்கத்தைப் போக்க வேறு உறுதியுண்டோ?

விண்ணிலங்கு மதிமுகமும் விற்புதலும்
　கொல்கொலைக்கு வேல்வாள் நாணும்
கண்ணிதென வரிபரந்து கடைகிழிக்கும்
　மதர்விழியும் காமக் காதல்
எண்ணருஞ்சன் னதமூட்டும் இளமுலையும்
　குறுநகையும் இலங்க ஒல்கும்
வண்ணமயி லையுங்கூட மறக்கவென்பி
　ரோவெனவே வழங்க லுற்றாம். 53

விற்புதலும் - (வி + புதல்) - வில்போன்ற புருவம்; கொல் கொலைக்கு...வேல் நாணும் கண்-வேலும் வாளும்கூடக்கொலைக்கு நாணும், ஆனால் மாதர் கண் நோக்கு அஞ்சாது, வரிபரந்து-செவ்வரி பரந்து, சிவந்த சிறு கோடுகளைப் பெற்று; கடை கிழிக்கும்-எல்லை தாண்டும்; மதர்விழியும்-செருக்குக் கொண்ட கண்ணும்; காமக்காதல்-காமத்தால் வரும் ஆசை. எண்ணரும் சன்னதம் மூட்டும் இளமுலையும்-சொல்லமுடியாத ஆவேசம் உண்டுபண்ணும் இளமுலையும், (சன்னதம்-ஆவேசம்); குறுநகை-புன்சிரிப்பு; இலங்க ஒல்கும்-அழகுபடக் குழையும், வண்ண மயிலையுங்கூட மறக்க வென்பிரோ-வர்ணமயில் போன்ற மனைவியையும் மறக்கவும் கூடுமோ? வழங்கலுற்றாம்-விடைகூற முற்பட்டதாம்.

நிலவொழுகு மதிமுகத்தில் நெடுமூக்கும்
　நீண்டவிழி நிரையும் முத்தென்
றிலகுமிள நகையதனை மறைக்குமித
　ழையுங்குறித்தே ஈர்ந்து பார்க்கில்
அலமிகுத்த ஆசைதரும் அரிவைமுகத்
　தழகதனை அறிய லாகும்
முலையதனை மூடியதோல் அகன்றிடிவம்
　முலையழகும் உணர்வாய் நெஞ்சே. 54

நீண்ட விழிநிமை-நீண்ட கண்ணின் இமை (நிமை-இமை) முத்தென்று இலகு முத்துப்போன்ற பற்கள் விளங்கக் காட்டும் புன்சிரிப்பும், ஈர்ந்து பார்க்கில்-பிளந்து நோக்கின்; அல மிகுந்த-சஞ்சலமிகுந்த; அரிவை-பெண்; முலையதனை... உணர்வாய்-முலையின் தோல் நீக்கப்பட்டால் அழகில்லாத தசையும் நரம்பும் தான் காணப்படும்; இதை அறிவாய் நெஞ்சே.

கன்னியர்தம் ஒளிர்முகத்தைக் கண்டகண்ணால்
வெண்டலையைக் கருதி ஊன்றி
உன்னியதின் உறுப்பறிந்து பெண்முகமும்
இப்படியொன் றென்ன ஓர்ந்து
மின்னலெனப் பேசுமுடல் மலக்கூடு
அழியும்இது மின்போல் நெஞ்சே
பொன்னின்மலை என்றமுலை பொதிந்ததசைக்
கட்டியெனப் பொருந்தி டாயே. 55

கன்னி-குமரி; வெண்டலை-தலையோடு; பெண்முகமும்ஒன்று-பெண் முகமும் தசை முதலியவைகளை அகற்றினால் வெண்டலை யாகத்தான் இருக்கும். மின்னலெனப் பேசுமுடல்-மின்னல் கொடி என வர்ணிக்கப்படும் மங்கையர் உடம்பு; மலக்கூடு-மலக்கூடாக நிற்கும்; அழியும் இது மின்போல்-இந்த உடல் மின்னல்போல விரைவில் அழியும். அழியக்கூடிய இந்தஉடல் இன்பமாகுமா?

கள்ளொழுகு மலர்சூட்டிக் குழல்நாற்றந்
தனைமாற்றிக் களபச் சேற்றை
அள்ளியவள் மீதணிந்தே உடல்நாற்றம்
மாற்றிவைத்தாய் அவள்முன் நின்று
வெள்ளெலும்பைக் காட்டிநகைத் திடமயங்கி
உடல்மறந்து வேட்கை மிஞ்சிக்
கள்ளமலத் துடன்கலந்த நெஞ்சேநீ
அவளுடலைக் கருதி லாயே. 56

கள்-தேன்; குழல்-பெண்மயிர்; களபம்-கலவைச் சாந்து வெள்ளெலும்பு-வெண் பற்கள்; வேட்கை மிஞ்சி-இச்சை மீதூர; கள்ளமலம்-குற்றமான காமத்தினால் வரும் தாது (மலம் - தாது) கருதிலாயே-எண்ணிப் பார்க்கவில்லையே.

நீருண்ட கட்டிதனை வேல்என்றும்
கயல்என்றும் நெடுங்கண் என்றும்
தாரணியெ லாமறியும் ஏன்பைமுத்து
நகையென்றும் தசையின் கண்டம்
வாருருவித் தத்தியெழு முலையென்றும்
தோலுதட்டில் வரும்பல் லூத்தை
சேருமெச்சில் அமுதமென்றே குருதிகுழி
யின்பமதில் திகைத்தாய் நெஞ்சே. 57

நீருண்ட கட்டி-நீர் மிகுந்த உருண்டையான கண்; வேலென்றும், கயலென்றும்-வேல்விழி என்றும் கெண்டையினை ஒத்தது என்றும்; தாரணி-உலகம்; வார்உருவித் தத்தி எழும் முலை-கச்சைப் பிதுக்கிக்கொண்டு எழும் அழகிய முலை; (வார்-கச்சை). தோலுதட்டில் ... அமுதமென்று - தோலான உதட்டினுள் பல்லின் ஊத்தை சேர்ந்து வழியும் உதட்டில் ஊறும் நீரை அமுதமென்று; குருதிகுழி - இரத்தமும் கோழையும் பொருந்திய அல்குல்; திகைத்தாய்-மயங்கினாய்.

துரியநிறைப் பரமகுரு சொல்லியநன்
னிலைமயக்கிற் சொக்கி நாளும்
பிரமமணிச் சுடர்மலையிற் கண்ணூன்றிப்
பரமசுகம் பெற்று வாழக்
கருதிநசை யடங்காமல் கன்னியருக்
காளாகிக் கலங்கி நொந்து
குருதியொடு புன்னீர்கள் ஒழுகுகுழி
யின்பமதைக் குறித்தாய் நெஞ்சே. 58

நன்னிலை மயக்கில் சொக்கி-சிற்றின்ப மயக்கத்தை விட்டுப் பேரின்ப பரவசம் பெற்று; பிரமமணிச் சுடர்மலை-பிரமமாகிய தேசோமயமான மலை; பரமசுகம்-நிரதிசய ஆனந்தம்; நசை-ஆசை; கன்னியருக்காளாகி - பெண்களுக்கு அடிமையாய்; குறித்தாய்-குறிக்கோளாய்க் கொண்டாய்.

பூரணத்தின் நிலைநிதமும் புகன்றிருக்கப்
பூவையரைப் புகழ்ந்தாய் என்றே
சீருறைந்த அறிவுரைக்கத் தெரிவையர்கள்
நிலையெனக்குத் தெரிந்தும் என்ன
காரணமோ அத்துவிதக் காரியம்நீர்
உரைக்குமிந்தக் கணத்தி லேயும்
ஆரமுலை மீதாசை யாகுதென்செய்
வேன்எனவே அறிவு கூறும்: 59

பூரணத்தின் நிலை நிதமும் புகன்றிருக்க - பூரணமாகிய சின்மயப் பொருளின் நிலை தினமும் உனக்கு உபதேசிக்கப் பட்டிருக்க; பூவையர் - பெண்டிர்; தெரிவையர் - பெண்டிர்; என்ன காரணமோ? - பிராப்தமோ; அத்துவிதக் காரியம் - தச காரியங்களில் நிலையான சிவ தரிசனம்; சிவபூசையும் எனலாம். ஆரமுலை - முத்தாரம் அணிந்த முலை; என் செய்வேன் - பாவியேன், என்ன செய்வேன்!

நாடிநரம் பெலும்புதசை தோற்குருதி
நிணமபொதிந்து நாறற் பீற்றல்
கூடியதிற் புழுக்குதிக்குங் கும்பியெனும்
மலப்பாண்டக் கூட்டை நாளும்
தேடரிய பேரழகாம் எமதுடலென்
றாசைமிகச் சிறந்த தாலே
வாடுமிடை யாருடல்மேல் ஆசையுற்றாய்
உன்னுடலை மதித்தி லாயே. 60

நாடி - உட்டுளை (வாயு செல்லும் வழி) நிணம் - கொழுப்பு; நாறல் - துர்நாற்றம்; பீற்றல்- ஒழுகி வெளிப்படல், துவாரங்கள் வழிக் கசிதல்; கூடியதிற் - கூடி + அதில்; புழுக்குதிக்கும் - புழுக் கள் விளையாடும்; கும்பி- வயிறு; கூட்டை-உடம்பை; பேரழகாம் எமது உடல் - இத்தகைய புன்புலால் யாக்கையைப் பேரழகான தென எண்ணி; ஆசைமிகச் சிறந்ததாலே - உடல்பற்று மிக்க தாலே: வாடும் இடையார் - துவளும் இடையையுடைய பெண்டிர்; உன் உடலை மதித்திலாயே - உன் உடல் பிரகிருதி சம்பந்தமான ஒரு கூட்டம் என்று உணரவில்லையே.

பசியறவே புசிப்பதற்கா ஆடீர்ந்தே
உரிக்குமவர் பாலிற் சென்று
வசையறவே அசங்கிதத்தை மறந்துநினை
வதில்ஊன்றி வளமை பார்க்கின்
தசையெலும்பு குடல்ஈரல் நிணம்குருதி
இருப்பதுவைத் தன்தே கத்தும்
பிசகிலா திப்படியே இருக்குதெனில்
பெண்ணாசை பெறுமோ நெஞ்சே. 61

பசியறவே - பசி நீங்க; ஆடீர்ந்தேயுரிக்குமவர் - ஆட்டைப் பிளந்து தோலை உரிப்போர்; வசையறவே - கொழுப்புப் பகுதி நீங்கவே; தோலும் - கொழுப்பும் நீங்க எலும்பு குடல் முதலியன காணபெறும்; வசை - கொழுப்பு; அசங்கிதம் - அருவருப்பு.

கத்திகரந் தவறிகரத் தரியதசை
தோல் நரம்பு காணக் கொய்தே
அத்திவெளி கண்டுதென உரைப்பதன்றித்
தோற்கூடென் றகத்தெண் ணாமல்
சித்திரமாய் அழகுமணிப் பூண்இலங்கத்
தினங்கலவை திமிர்ந்து வாசக்
கொத்துமலர்த் தாரணிந்தே இறுமாப்பாய்ப்
பெண்மயக்கங் கொண்டாய் நெஞ்சே. 62

கரந்தவறி-கை தவறி; கரத்து அரிய-கையை வெட்ட; அத்தி-எலும்பு; என உரைப்பதன்றி-நாமே ஆராய்ந்து பார்க்கா விட்டாலும்; கத்தி கைதவறி விழுந்து உடல் கூற்றைக்காணும்போது கூட, அதை உணராது. அகத்து-நெஞ்சில்; பூண் இலங்க- ஆபரணங்கள் பிரகாசிக்க; கலவை-சாந்து; தாரணிந்தே-மாலைகள் சூடி

பிணங்கள்சுடும் சுடுகாட்டுக் கேகிதனி
யாகவொரு பிணத்தின் பாற்சென்
றிணங்கிபரப் படங்கிடவே உணர்ந்தறிவாய்ப்
பிணவுறுப்பு மிசைந்த தோலுங்
கணங்கொள்நவை நிணம் ஒழுகும் படிநாற
வேகுமதைக் கண்டே எந்த
மணங்கொளுடல் தனைச்சுடினும் இவ்விதமாம்
எனக்கருதி மதித்தி டாயோ. 63

இணங்கி-நெருங்கி; பரப்படங்கிடவே - அகலம் அடங்கவே (பிடி சாம்பலாகப் போக); பிண உறுப்பு-சவத்தின் உறுப்புகளும்; கணங்கொள்-கண நேரத்திலே; நவை நிணம்-வெறுக்கத்தக்க கொழுப்பு; வேகுமதை-வெந்து போவதை; எந்த மணங்கொள் உடல்தனை எல்லா வாசனைகள் பூசிய உடலாயினும்.

மங்கையர்கள் உடல்நிலையும் தனதுடலின்
பெருநிலையும் மதித்து நின்று
பங்கமற நான்இறக்கப் படிந்துகுரு
வருள்நிலையின் பதிந்த மிக்கோர்
கொங்கைமட மின்னார்கள் குவிமுலையின்
மயங்கிமனங் கொதியார் என்று
சங்கையற நெஞ்சமதுக் குரைத்திடவே
பேசாதால் சாற்ற லுற்றாம். 64

மங்கையர்கள் ...... பெருநிலையும் மதித்து நின்று-மங்கையர் உடலும் தம் உடலும் மட்பாவை என நன்குணர்ந்து; பங்கமற நானிறக்க-'நான்' என்ற அபிமானத்தை (பற்றை) குற்றமற விட்டு; படிந்து-அந்நிலையில் நிலையாய் நின்று; குருவருள் நிலை-சத்திநிபாத நிலை; பதிந்த மிக்கோர்-நிலைபெற நிற்கும் பெரியோர்; சங்கையற-ஐயம் அகல; பேசாதால் சாற்றலுற்றாம்-நெஞ்சம் பேசாதால் கூறினோம்.

புலன்கலங்கி மனமயங்கி அறிவழிந்து
நிலைதளர்ந்து பொறியும் மெத்த
அலம்வந்து மெய்தளர்ந்து கண்ணிருண்டு
வாய்குழறி ஆவி நின்ற
நிலைகலங்கி மரணமுறும் வேதனையைப்
பரமறியும் நிலையே அல்லால்
பலரறிய ஒண்ணாத மரணவத்தை
வருமுன்னம் படியாய் நெஞ்சே. 65

புலன் ...... கலங்கி - திருஞானசம்பந்தர் திருவையாற்றுத் தேவாரம், ஈண்டு நோக்குக; ''புலனைந்தும் பொறி கலங்கி நெறிமயங்கி யறிவழிந்திட் டைம்மேலுந்தி அலமந்த போதாக அஞ்சேலென் றருள்செய்வா னமருங் கோயில் ... '' பரமறியும்

நிலையே யல்லால்-நம்மைக் காக்கும் கடவுள் அறியும் நிலையல்லாது; பலரறியவொண்ணாத மரணவத்தை - உனது மரண வத்தையைச் சுற்றி நிற்கும் ஒருவரும் அறியமாட்டார்கள்: அலம்வந்து-கலங்கி, வருந்தி; வரு முன்னம் படியாய் நெஞ்சே - அத்தகைய மரணவத்தை வருமுன் உண்மையில் படிந்து நில்.

குடம்பைதனில் இருந்துபறந் தகன்றபுட்போல்
இவ்வுயிரும் குருதி தோய்ந்த
உடம்பதனை அகன்றுவிடில் இந்தவுடல்
போம்வழியே துரைப்பேன் பேய்கள்
நடம்பயிலும் சுடலைதனில் நரிநாய்கள்
விருந்துண்டு நடிக்க நாள்கள்
அடைந்திடுமுன் குருவருளை அணுகென்ன
நெஞ்சமுரை அறைய லுற்றாம். 66

குடம்பை-கூடு: முட்டையின் ஓடு. புட்போல்-பறவை போல்; குருவருளை யணுகென்ன; நெஞ்சம் உரை யறைய லுற்றாம் - குருவருளை நாடும்படி நெஞ்சுக்கு உபதேசம் கூறினோம்.

திண்ணமிகும் என்தேகந் தனைநரிதின்
பதுநிசமோ செப்பாய் என்னப்
பெண்ணினொடு தந்தையன்னை சுற்றமுடன்
ஆண்டவனும் பெற்ற சேயும்
கண்ணினெதிர் சொந்தமென வாழ்வர்உயிர்
இழந்தவுடன் கழுகும் நாயும்
எண்ணரிய புழுவுடன் மண்சொந்தமெனும்
உடற்சொந்தம் என்றாய் நெஞ்சே. 67

திண்ணமிகும்-வலிமை மிகுந்த; நரி தின்பது நிசமோ சொல் என்றது மீண்டும் பற்றின் மிகுதியால் நம்பாமையைக் குறிக்கும். ஆண்டவனும்-கணவனும்; மண் சொந்த... நெஞ்சே-மண்ணுக்குச் சொந்தமாகப் போகும் உடலை உனக்குச் சொந்தம் என்று எண்ணினாயே, நெஞ்சே!

ஆவியிறந் திடின்முன்னாள் அணைந்திருந்த
அரிவையரும் அகல நின்று
மேவிவிழி யார்பார்க்கப் பயந்துபிணம்
எனவொதுங்க மீறி நாய்கள்
தாவஎரி நரிக்கிரையாய்த் தரணிதனில்
பலர்சுடலை சாரக் கண்டும்
கூவியழு தழுதுகுரு வடிவணுகி
லாய்எனவே நெஞ்சம் கூறும். 68

முன்னாள் அணைந்திருந்த-முன்பு சேர்ந்திருந்த; அரிவையரும்-மனைவியும்; மேவி...பயந்து - சுடுகாட்டில் முகத்தைப் பார்க்கப் பயந்து பார்க்காமல் திரும்புவார்கள்; அகல நின்று-தூரமாக நின்று; நாய்கள் தாவநாய்கள் பிணத்தைத் தாவிப் பிடுங்க; எரி-நெருப்பு; பலர்...கண்டும்-பலபேர் இப்படிச்சாவதைக் கண்டும்; குருவடி அணுகிலாய்-குருவை அணுகி உயிர்க்கு உறுதி தேடினாய் இல்லை.

இந்தவுடல் இறந்திடுமுன் ஏககுரு
பதம்பணியா திருப்பேனோ வென்று
அந்தமுடன் உரைத்திடவே அறிவுரைக்கும்
பாலகனாய் அஞ்ஞா னத்தில்
பந்தமுற்றாய் காளையுமாய்ப் பரத்தையருக்
காளானாய் பகைத்த மூப்பு
வந்தவுடன் உடல்தளர்வாய் நிலையறிவ
தென்றுநெஞ்சே வாதுற் றாயே. 69

ஏககுரு-ஒப்பற்ற குரு; அந்தமுடன்-அழகாக அதாவது வெறும் பேச்சாய்; பாலகனாய் - சிறுவனாகத்திடபுத்தியில்லாமல்; அஞ்ஞானத்தில் பந்தமுற்றாய்-இருளில் கட்டுப்பட்டாய்; காளையுமாய்-கட்டிளமை கொண்ட ஆண்மகனாய்; பரத்தையருக் காளானாய்-வேசிகளுக்கு அடிமையானாய்; பகைத்த மூப்பு-பகையாய் வரும் மூப்பு; உடல் தளர்வாய்-உடல் தளர்வு பெறுவாய்; அதாவது பாலியத்தையும் வீணாக்கினாய்; மூப்பிலும் அசக்தனானாய் என்றபடி வாதுற்றாய்-தருக்கம் செய்யத் தொடங்கினாய்.

எனவுரைக்க நெஞ்சமது காலையெனும்
    பருவமது ஏகி னால்இத்
தனமுதலே டணைவிளைக்கும் கவலையறும்
    பிறகுகுரு தாட்கன் புற்றே
தினம்பணிந்து நிலைபெறுவேன் எனவறிவு
    செப்பும்இடர் செறிந்தே துன்பக்
கனல்அட்ர உடல்தளர்வ தன்றிபுவி
    யாசைநிலை காண லாமோ. 70

ஏகினால்-கழிந்தால்; தனமுதலேடணை-தனம் முதலாகிய விருப்பம் (ஏடணை: விருப்பம்); இளமையில் தனம் தேடும் தொல்லை தீர்ந்தபின், வயதான பிறகு குருவை நாடுவன் என்று காலங்கழிப்பது ஈண்டுக் குறிக்கப்படுவது இடர்செறிந்தே-துன்பம் பெருகி; துன்பக்கனல் அடர-துன்பம் என்னும் தீ பெருக; உடல் தளர்வதன்றிப் புவி ஆசை நீங்குவதில்லை என்பதாம்.

கவலையற்றே உடல்நடுங்கிக் கனபிணிமே
    லாம்மூப்புக் காலந் தன்னைக்
குவலயத்தில் கவலையிலாக் காலம்என
    மூப்பதிலே குருவின் தாளைத்
தவமிசையின் பெறுவன் என உரைத்தனைசித்
    தங்குவியத் தகுமோ உன்றன்
நவையிலுடல் இடைசாயா திருக்குமோ
    கண்குறிமேல் நடுமோ நெஞ்சே. 71.

கனபிணி மேலாம் மூப்பு-பிணிக்கூட்டம் வந்து சாரும் மூப்பு; மூப்பதிலே-முதுமைப் பருவத்திலே; தவமிசையின்-தவமிருந்தால்; சித்தங்கு வியத்தகுமோ-உன்னுடைய புத்திசாலித் தனத்தை வியக்க முடியுமோ? சித்தம் குவியத் தகுமோ எனப்பிரித்து மனம் ஒரு நிலைப்பட்டு நிற்குமா என்றும் பொருள் கொள்ளலாம். உன்றனவையில் உடல் - குற்றமில்லாத உடம்பு; இடை சாயாதிருக்குமோ - இடையில் விழாமலேயிருக்குமா? நவையில் உடல் என்றது ஏசல்; புகழ்வதுபோலப் பழித்தல். கண்குறிமேல் நடுமோ-கண் திறந்திருப்பினும் பார்த்தவைகளை உணருமோ! (ஆவி பிரியும்போது நாட்டக்கண் இருந்தபடியே இருக்கும்).

இளமையெனும் பருவமதில் சற்குருவைக்
கிட்டாமல் இருந்து தேகம்
தளருமுது மூப்பதனில் பெறுவன்என
உரைத்ததுமெய் தளர்ந்து நாளும்
இளமையற்ற தொண்ணூறு வயதுடையன்
மங்கைமணம் இசைந்து கூடி
வளம்பெறுவேன் என்றதொக்கும் நெஞ்சேநீ
உரைத்ததென வழங்க லுற்றாம். 72

இளமையில் குருவை நாடாது வயோதிகத்தில் நாடுவது, தொண்ணூறு வயதுக் கிழவன் ஒரு மங்கையை மணந்து இன்புறுவேன் என்று அவலப்படுவது போலாகும் என்ற கருத்து இப்பாட்டில் கூறப்படுகிறது. முதுமூப்பு-மிக்க முதுமை; மெய்-உடம்பு.

பாளைவிரி கமுகனைய கந்தரத்தாள்
முலைமயக்கம் பற்றி உன்றன்
காளையெனும் பருவமது கழித்துவிடில்
பின்னயர்வு கடியும் ஆசான்
தாளைநினைந் தானந்த பரவசமாய்
நாட்கழித்தால் தளர்ந்து சாகும்
வேளையினும் ஆனந்தக் களிகூறும்
இதில்துணியாய் விரைவில் நெஞ்சே. 73

கமுகு-பாக்கு மரம்; கந்தரத்தாள் - கழுத்தையுடைவள்; அயர்வு கடியும் ஆசான்-அயர்வைப்போக்கும் குரு; தளர்ந்து ... மூப்புக் காலத்திலாவது குருவை நாடுக என்றபடி.

உன்னுடைய காளையெனும் இப்பருவந்
தனிற்குருதாள் உகந்தி டாமல்
கன்னியொடு பொன்புவிமேல் காதலுற்று
நெஞ்சகமே கலங்கி மெத்த
இன்னலனு பவித்தாயென் றிடநெஞ்சம்
இயம்பும் இந்தப் பருவம் ஏக
இன்னம்நெடு நாட்செல்லும் இதில்பெறுவேன்
எனவறிவும் இயம்ப லுற்றாம். 74

கன்னியொடு பொன் புவி-பெண், பொன், மண் ஆசைகள்; இவற்றை மூவாசைகள் என்பர். பருவம் ஏக-பருவம் மறைய; நெடுநாட் செல்லும்-வெகு காலம் நிலைத்துச் செல்லும்; இதில் பெறுவேன்-இதில் இன்பம் பெறுவேன்.

சிலையிரும்பை உடலாகக் கொண்டோரும்
இத்துணிவாய்ச் செப்பார் நீயும்
பலவிதமாய் மொழியலுற்றாய் இப்பருவம்
கழியவெகு பகலுண் டென்றாய்
அலமிகுத்த நெஞ்சகமே ஆவியிந்தத்
தோற்கூட்டில் அனந்த காலம்
இலகுமென நினைத்தனையே என்றறிவும்
உடல்நிலையை இயம்ப லுற்றாம் 75

சிலையிரும்பை உடலாகக் கொண்டோரும்-இரும்பு விக்கிரகம் போன்ற உடல் வலிமை பெற்றவரும், அல்லது கல்லையும் இரும்பையும் போன்ற உடல் வலியாளரும்; இத்துணிவாய்ச் செப்பார் - அவர்களும் துணிவாக என்றும் இருப்போம் என்று சொல்லார்-அவர்களும் துணிவாக என்றும் இருப்போம் என்று சொல்லார்; அனந்த காலம் இலகுமென - முடிவிலாக் காலம் இருக்குமென.

மங்குலிடு வில்புனலில் வருங்குமிழி
எறிந்தசிலை மாறாத் தீயில்
தங்குமென வைத்தசில வெண்ணெயொடு
மின்னலையும் தரணி தன்னில்
பங்கமிலா திருக்குமிது நித்தியமென்
றுரைத்தாலும் பருந்தோற் பீற்றல்
அங்கமதில் உயர்நிலையென் றாருரைப்பார்
நீயுரைத்தாய் அலைந்த நெஞ்சே. 76

மங்குல் + இடு + வில் - ஆகாயத்தில் தோன்றும் வானவில்; புனலில் வருங் குமிழி - நீரில் தோன்றும் நீர்க்குமிழி; எறிந்த சிலை - எறியப்பட்ட கல்; புனலில் எறியப்பட்ட கல்லின் நீர்வடு விரைவில் மாயும். மாறாத் தீயில் தங்குமென வைத்த

வெண்ணெய் - அணையாத நெருப்பில் இட்ட வெண்ணெய்; மின்னலையும் - மின்னல் ஒளியையும்; பருந்தோல் பீற்றல் அங்க மதில் - பருமையான தோலால் மூடப்பட்ட துவாரமுள்ள உடம்பில்; உயிர்நிலை என்று ஆர் உரைப்பார் - உயிர் என்றும் நிற்குமென்று யார் சொல்வார்.

காத்திரத்தின் நேற்றிருந்தார் இன்றிறந்தார்
 எனுமுலகைக் கருதிப் பார்த்தோர்
மாத்திரைப்போ தும்வாழ்வ தரிதெனவே
 உணர்ந்திதனுள் மௌன மூறும்
கோத்திரத்தின் உச்சியிற்சென் றமுதருந்த
 நாட்கழித்திற் குறித்தே துன்பப்
பாத்திரமாய் அலையலுற்றாய் நெஞ்சேயென்
 றறிவும்இனிப் பகர லுற்றாம். 77

காத்திரத்தில் - உடம்பில்; மாத்திரைப் போதும் - நொடி நேரம்கூட; மௌனமூறும் - மௌனம் பெருகும்; கோத்திரத்தின் உச்சியில் - மலையின் உச்சியில் கோத்திரம் - மலை; அமுதருந்த சுபானுபவம் எனும் அமுதத்தை அருந்த; நாட்கழித்து - நாட்களைப் போக்கி; இல்குறித்தே - இல்லறவின்பங்களில் ஈடுபட்டு; துன்பப் பாத்திரமாய் - துன்பத்துக் களமாக.

தினைப்பொழுது வாழ்வுதரி தென்றறிந்த
 தெருளுடையோர் சிந்தை தன்னில்
நினைத்தவுடன் ஆனந்த நிலையணுகிப்
 பேதமற நிற்பர் நீயும்
கனத்தபெருங் கரணாதிக் கனல்அவியக்
 குருவருளைக் கருதி மோன
தனத்தினைத்தே டாதிருந்து நாட்கழித்தாய்
 எனநெஞ்சம் சாற்றும் அம்மா. 78

தினைப்பொழுதும் - ஒரு நொடிப் போதும்; தெருளுடையோர் - அறிவுடையார்; ஆனந்தநிலை அணுகிப்பேதமற நிற்பர்- சிந்தனையை ஒருமுகப்படுத்திப் பிரம்மசித்தி என்ற ஆனந்த நிலையில் நிற்பர். இது பேதமற்ற அத்துவித நிலை என்பர். கனத்த பெரும் - கனமான; தவிர்க்க முடியாத. கரணாதிக்கனல்

அவிய- அந்தக்கரணங்களின் (மனம், புத்தி, சித்தம், அகங்காரம்) தீப்போல் பரவும் செயலடக்கி; குருவருளைக் கருதி-குருவருளைச் சிந்தையில் வைத்து; மோனத்தனத்தினை - மோனம் என்ற செல்வத்தை; தேடாதிருந்து நாட்கழித்தாய் - நாடாதிருந்து காலத்தைப் போக்கினாய்.

தேகமெனும் உடலிறக்கும் என்றமொழி
நெஞ்சுணர்ந்து தேகம் நொந்து
சாகநெறி யிலாதாயோர் உபாயம்இல்லை
யோவெனவே சாற்றக் கேட்டு
யூகமுற்ற நெஞ்சேயென் றறிவுரைக்கும்
நீர்க்குமிழி ஒழிந்தி டாமல்
பாகமுடன் பூன்விசிக்க நினைந்தவனை
ஒக்குமெனப் பகர லுற்றாம். 79

தேகம்-தகிக்கப்படுவது தேகம்; சாக நெறியிலாதாய் ஓர் உபாயம்—சாதற்கு செல்லாத ஒரு வழி; சாற்றக்கேட்டு-சொல்லக் கேட்டு; யூகமுற்ற நெஞ்சே-அறிவுடைய நெஞ்சே (யூகம்-உட்பொருளை அறியும் ஆற்றல்); ஒழிந்திடாமல்-எஞ்சாமல், முற்றும்; பூன்விசிக்க-பூரணமாகக் கட்ட; பூன்-பூர்ணம்.

அதுவிதுவென் றுணரறியாப் பொருளமைத்த
நாட்கழியில் அண்டத் தோடு
மதிகதிரோ டேபூதம் அழியுமெனில்
பெண்யோனி வழியே சிந்தும்
உதிரமுருண் டிட்டவுண்டை யாந்தேக-
மலபாண்டம் ஒழிந்தி டாமற்
பதியவிருந் திடயூகம் உண்டாமோ
நெஞ்சகமே பகர்ந்தி டாயே.

அதுவிது...நாட்கழியில் - பிரளயகாலத்தில்; அண்டத்தோடு மதிகதிரோடு பூதமழியும்-அண்டங்களும் சூரியசந்திரனும், ஐம் பூதங்களும் அழியும்; பெண் யோனி-பெண் குறி; உதிரம்-சுரோணிதம்; உருண்டிட்ட உண்டை-உருண்டையான பிண்டம்; மல பாண்டம்-சீழ் ரத்தம் முதலியவை அடங்கிய கலன்; பதிய இருந்திட யூகமுண்டாமோ-நிலைத்து நிற்க வழியுண்டோ! (சூரிய சந்திராதிகளெல்லாம் தலைதடு மாறிப் போகும்போது, இந்தப் பூதஉடம்பு எம்மாத்திரம் என்றபடி).

மெய்யெனவே உரைக்கும்இந்தப் புழுக்கூட்டை
நம்பியதில் மெலிந்தி டாமல்
பொய்யெனுமிவ் வுடலிறக்கும் என்பதனை
மறவாமல் பொருந்தி னாற்பின்
வையமெலாம் அழுந்தியதோர் ஆசையெனுங்
கடல்வற்றி வடியும் துன்பம்
செய்யுமந்தக் கவலையெனும் திரையோயும்
விரைவில் அருள் தேடாய் நெஞ்சே. 81

மெலிந்திடாமல் - தளர்வடையாமல்; வையமெலாம்... கடல் வற்றி-உலகம் அழிந்து ஆசை என்னும் சாகரம் வற்றிப்போய்; திரை-அலை.

எனவுரைத்த மொழிகேட்ட நெஞ்சியம்பும்:
எண்ணிறந்த சமயந் தன்னில்
தனிப்பொருளுக் கன்பான சமயம்இயம்
பிடில் அதனிற் சார்வேன் என்ன
மனமயக்காய்ப் பரஞ்சுடரை வெகுவிதமாய்
வெவ்வேறாய் மதித்து நின்று
தினம்பணிவர் நிலையறியார் பேர்வேறாய்ப்
பேசிநெஞ்சே தியங்கு வாரே. 82

எனவுரைத்த......சார்வேனென்ன - அதவா, நெஞ்சானது உடல் நிலையாமையை உணர்ந்த பின்னும் நல்வழிக்கு உபாயமாக ஒன்றைக் கடைப் பிடிக்கப் பல்வேறு சமயங்கள் இருக்கின்றனவே, தனிப்பொருளாகிய இறைவனை அடையும் சமயம் இது எனச் செப்பில் அதைச் சார்வேன் என்று கூறும். மனமயக்கால்-மனமயக்கத்தாலே; ஒன்றாய பரஞ்சுடரை வெவ்வேறாகப் பேசி பணிவார்கள் ('ஏகம் சத், பகுதா விப்ரா வதந்தி'' என்றது உபநிடத வாக்கியம்; தியங்குவாரே-சோர்வடைவார்.

கண்ணிரண்டும் இல்லாதார் சிலர்கரியின்
உருவதனைக் கரத்தால் நீவித்
திண்ணமைந்த யானையுருத் தாங்கள் கண்ட
படியுரைத்துத் தியங்கு வார்போல்
சண்முகப்பல் சமயமுடை யோர்பரனைச்
சாற்றிதினம் தவித்து நோகுந்
தன்மையல்லால் பரமிருக்கா திடமுண்டோ
எனக்கருதித் தணிந்தி டாரே. 83

கண்ணிரண்டு ........ யுரைத்து - குருடர்கள் யானையை வெவ்வேறிடங்களில் தடவிப் பார்த்து வெவ்வேறாய்க் கூறிய கதை; நீவி - தடவி; சண்முகப் பல் சமயம் - அறுவகைச் சமயம் (பௌத்தம், ஜைனம், பைரவம், காளாமுகம், உலோகாயதம், சூனியவாதம்-இவை புறச்சமய வைதிகர் கொள்வது; சைவர்கள் கொள்வது-வைரவம், வாமம், காளாமுகம், மாபிரதம், பாசுபதம், சைவம் என்ற ஆறு சமயங்கள்; புறச் சமயங்கள்- உலோகாயதம், பௌத்தம், சமணம், மீமாஞ்சை, பாஞ்சராத்திரம், பட்டாசாரியம், பௌராணிக மதங்கள் ஆறு-காணாபத்தியம், கௌமாரம், சாக்தம், சௌரம், பாஞ்சராத்திரம், சைவம்); பரனைச் சாற்றி- இந்த மதத்தில்தான் கடவுள் உண்டு; அதில் இல்லை எனக் கூறித் தவித்துச் சண்டையிடுவார்கள்; பரமிருக்கா திடமுண்டோ ...... எல்லாச் சமயங்களில் ஆங்காங்கே சிவன் உளன் என்ற உண்மை; ''ஒத்தாறு சமயங்கட்கொரு தலைவன்'' திருஞானசம்பந்தர் தேவராம்

வீதிதனில் விளையாடும் சிறுபாலர்
அகமதனை விரும்பிச் செல்லும்
போதில்உயர் மாமதியைத் தாங்கள்தங்க
ளுடன்வருகப் பொருந்து வார்போல்
காதலுற்ற சமயமெலாம் எனதுனதென்
றேபரத்தைக் கருதித் தர்க்க
வாதமுடன் உழல்வதல்லால் எவ்விடமும்
இறையிருக்கும் வளங்கா ணாரே. 84

பொருந்துவார்போல் - அமைப்பார் போல; காதலுற்ற ...... கருதி விரும்பும் சமயங்கள் எல்லாம், தம் தெய்வம் எனக்கூறிப் போராடும்; (''சமயகோ டிகளெலாம் தந்தெய்வமெந்தெய்வ மென்றே யிருந்து எதிர் வழக்கிடவும்''— தாயுமானவர். பரம்- பரம்பொருள்; தர்க்கவாதம் - நியாய நூல்படி வாதித்தல்.

எவர்கள்எதை இறைஞ்சிடினும் பரஞ்சுடரே
அதிலிருப்ப தெனினும் மெத்தக்
கவலையுறுஞ் சமயமதால் பரமசுகம்
அடைவதற்குக் காணொ ணாது

தவமிசைந்த பரமகுரு நிலையிருக்கச்
சமயமதில் சார்வ தென்னில்
சுவையினிய அமுதிருக்கி மாழ்கிடவே
கள்ளுண்ட தொக்கும் நெஞ்சே. 85

இறைஞ்சிடினும் - வணங்கினாலும்; எவர்கள் ......... பரஞ் சுடரே அதிலிருப்பன் - (''வெவ்வேறாய் இரு மூன்று சமயமாகிப் புக்கானை எப்பொருட்கும் பொதுவானானை''; ''ஆறொன்றிய சமயங்களின் அவ்வவர்க் கப்பொருள்கள் வேறொன்றிலாதன'' ......... அப்பர் தேவாரங்கள், 'ஒத்தாறு சமயங்கட்கு ஒரு தலைவன் - திருநாவுக்கரசர் தேவாரம்.) தவமிசைந்த பரமகுரு நிலை-தக்ஷிணாமூர்த்தி நிலை; சமயமதில் சார்வதென்னில் சுவை யினிய அமுது - குரு லிங்க சங்கமம் என்ற மூன்றும் அமுதமா யிருக்க; மாழ்கிடவே - மயங்கிடவே; (மாழ்கு - மயக்கம், சாவு); கள்ளுண்ட தொக்கும் - அமுதிருக்க மயக்கம் தரும் கள்ளுண்ட தற்கு ஒப்பாகும்.

இந்தவிதம் சமயநெறி இயம்பிடவே
நெஞ்சுரைக்கும் இறையைப் பூசை
அந்தமுடன் புரியநெறி அருளாய்என்
றிட அறிவும் அறையும் ஆசான்
உந்தனக்கே அருள்புரிந்தால் அந்தநிலை
யிற்பரத்துக் குன்கண் ணென்னும்
கந்தமல ரிணைச்சாத்தி உளம்பதியப்
பணிந்தும் அருள் காண லாமே. 86

நெஞ்சுரைக்குமிறை-மனது பாவிக்கும் கடவுளை; அந்தமுடன் புரிய-முறையாக செய்ய; நெறியருளாய்-வழியைச் செப்பு; அறையும்-சொல்லும்; அந்த நிலையில் - குருவருள் நிலையில்; பரத்துக்கு - பரம்பொருளுக்கு; கண்ணென்னும் அந்த மலரினை சாத்தி-கண் என்பதாகிய வாசனை மலரை சாத்தி; உளம் பதியப் பணிந்தும்-உள்ளத்தை இறைவன்பால் வைத்து வணங்கி; அருள் காணலாமே-அருளைப் பெறலாமே ('கண்' என்பது கூறிய விடத்து மற்றைய நான்கு பொறிகளையும் கூட்டி உணர்க. பூசனையில் ஐம்பொறிகளும் ஒன்றுபட்டு நிற்றல்வேண்டும்— ''ஐந்து பேரறிவும் கண்களே கொள்ள''—ஸ்ரீசேக்கிழார்)

பூசைபுரி பவனாகி மலராகிப்
பலவாகிப் பூசை தன்னில்
நேசமொடு மோதுகின்ற மந்திரமாத்
தெய்வமுமாம் நிட்க ளத்தைப்
பாசமுற்ற சமயநெறி கடந்தநிரா
மயகுருசொற் பதிந்தா னந்த
ஆசையொடு பணிவதல்லால் வேறேயோர்
பூசைநெறி அறியேன் நெஞ்சே. 87

மந்திரமாத் தெய்வமமுமாம் நிட்களத்தை-நிர்க்குணமான பரம் ஓதுகின்ற மந்திரமும், உபாசனைக்குரிய தெய்வமாம்; பூசை புரிபவன் மலர் முதலாயினவற்றிற்கு 'ஆகி' என்ற வினையும், மந்திரம், தெய்வம் என்றவற்றிற்கு 'ஆம்' என்ற வினையும் வந்துள்ளதை நோக்குக. பாசமுற்ற-பற்றுக்கிடான; சமயநெறி கடந்த-பல்வேறு சமயக் கோட்பாடுகட்கு அதீதமான; நிராமய-நோயற்ற; (அஞ்ஞானம் என்ற நோயற்ற). குருசொல்-குரு உபதேசித்தது; ஆனந்த ஆசையொடு-ஆனந்த பரவசமாய்; வேறொரு பூசையறியேன்-வேறு சரியை கிரியைகளாகிய பூசனை களைவிட மேலானது குருவின் தீக்ஷைபெற்றுச் செய்யும் பூசனையே என்று கொள்க.

விண்ணினுக்கு விண்ணாகிப் பரவெளியாம்
பரஞ்சுடரை விரும்பிப் பூசை
பண்ணிநிற்கப் பரமகுரு நிலையலா
தில்லையெனப் பணிந்து கூறும்
கண்ணின்மணி எனும்குருவின் அடையாளம்
காட்டில் அவர் கழலை யானும்
திண்ணமிது பணிவன்என நெஞ்சுரைக்க
அறிவும்இனித் தேர்ந்து கூறும்: 88

பரவெளி - சிதாகாசம்; பரஞ்சுடராகி - பரஞ்சோதியாய்; ('சோதியே, சுடரே, சூழொளி விளக்கே'—திருவாசகம்); தகராலயத்தில் எழும் பர ஒளி. சிவபூசையில் இந்த உள்ளொளி காண்பதே பூசையின் பயனாகும்; பரமகுரு நிலையலாது-பரம்சிவமே அதிட்டித்து நிற்க; கண்ணின்மணி எனும் குருவின்

அடையாளம் காட்டில்-மேற்கூறிய சிவபூசை செய்ய சற்குரு நயனதீக்ஷை அருளினால்; அவர் கழலையானும் திண்ணமிது பணிவன்-குருவின் திருவடிகளை நான் உறுதியாகப் பணிவேன்; நெஞ்சுரைக்க அறிவும் இனித்தேர்ந்து கூறும்-நெஞ்சு சொல்ல அறிவும் ஆராய்ந்து உரைக்கும்.

அத்துவிதப் பரமகுரு தனையறிவ
தரிதரிதே அவர்பா தத்தில்
பத்திபுரி சற்சனரை அடுத்தவரோ
டன்பாகப் பழகி னாற்பின்
முத்திபெறக் குருகாண்பாய் எனவுரைக்க
அவர்குறியை மொழியாய் என்னச்
சித்தமதில் அறிந்தமட்டும் சற்சனர்தம்
பெருங்குணத்தைச் செப்ப லுற்றாம்; 89

அத்துவிதப் பரமகுரு தனையறிவதரிதரிதே-கலந்து நிற்கும் பரமாசாரியனை அறிவது மிக அரிது.. எனவே, அவர்... பழகி-பத்திபுரியும் பழவடியார்களாகிய நல்லோரை அணுகி அவருடன் இணக்கம் கொண்டு பழகினபின்; முத்திபெறக் குரு காண்பாய்-முத்தியைக் காட்டும் ஞான குரு வரும் நேரத்தை அறிவாய்; அவர் குறியை மொழியாய் என்ன-அவர் அடையாளத்தை சொல் என்ன; செப்பலுற்றாம்-சொல்லத் தொடங்கினோம். எப்போது இறைவன் குருவாய் வருவான் என்று சொல்ல இயலாது. சற்சனர்களிடம் அன்புடன் பழகி, அடியார்களிடத்தில் நேசமும் வைப்பது முதல் படி என்பது குறிப்பு.

பொய்யுலகந் தனில் அழுந்தி மயக்கமுறார்
ஆசைதனிற் பொருந்தார் உள்ளம்
ஐயமுறார் உலகிலுயிர் தன்னுயிர்போல்
அருள்புரிவார் ஆண்மை சொல்லார்
வையமதில் இருவகைக்கும் வாடார்கள்
மகிழார்கள் வாழ்ந்தார் நாளும்
துய்யபொலன் கமலமலர் எனவொரு சீர்ப்
பட்டுநிதம் துலங்கு வாரே. 90

உள்ளம் ஐயமுறார்-உள்ளத்தில் சந்தேகம் அடையார்; உலகிலுயிர் தன்னுயிர்போல் அருள்புரிவார்-பிறவுயிர்களைத் தன் உயிர்போல் மதித்து அருள் கூர்வார்; ஆண்மை சொல்லார்-ஆணவம் பேசார்; வையமதில் இரு வகைக்கும் வாடார்கள், மகிழார்கள், வருந்தார்-உலகத்தில் இன்ப துன்பங்களை ஒன்றாய்ப் பாவித்து சம புத்தியுடன் இருப்பார்; பொலன் கமல மலர்-பொன்னாலாகிய தாமரை மலர்; ஒரு சீர்ப்பட்டுத் துலங்குவாரே-என்றும் ஒரு தன்மையராய் விளங்குவார்; பொற்றாமரை மலர் வாடாது எப்பொழுதும் ஒளி தருவதுபோல இன்ப துன்பங்களில் துயருறாது என்றும் ஒருதன்மையராய் இறைநிலையழுந்தியிருப்பர்.

அண்டமெல்லாம் பொடியாக்க அருள்பெற்றும்
ஆணவமாய் அறையார் தங்கள்
பெண்டுபிள்ளை சுற்றமதைப் பேணாமல்
பிரிந்தும்உடற் பிரிந்து நின்று
கண்டுமன மகிழ்ந்துகுரு வருள்நிலையை
நாடியதில் கலந்து நிற்கும்
தொண்டர்புரி பெருந்தகைமை துடிதுடித்த
நெஞ்சேயான் சொல்லொண் ணாதே. 91

அண்டமெலாம் பொடியாக்க அருள் பெற்றும்-அண்டத்தை எல்லாம் கட்டி ஆண்டு பொடியாக்க வல்லமை பெறத் திருவருள் வலி இருந்தாலும்; ஆணவமாய் அறையார் - ஆணவத்தால் அடியார்கள் அம்மாதிரிப் பேசமாட்டார்கள்; பெண்டு பிள்ளை... பிரிந்து நின்று-பெண்டு பிள்ளை தன்னுடல் யாவையும் மறந்து; துடிதுடித்த நெஞ்சே-சிற்றின்பங்களைச் சாரத் துடிதுடிக்கும் நெஞ்சே.

தேசிகனார் அங்கைகொடு போதித்த
பரமநிலை சேர்ந்தே மோன
வாசமல ரணைமீது வண்டெனவே
துயில்வோர்இல் வாழ்வுற் றாலும்
பாசமுறார் வரும்பொருள்மேல் போனபொரு
ளுக்கிரங்கிப் பதையார் வந்து
நேசமுறும் பொருள்வெறுக்கார் நினமலவா
னந்தமது நிறைந்த மிக்கோர் 92

தேசிகனார் அங்கை கொடு பாவித்த பரமநிலை சேர்ந்தே- தீக்ஷாகுரு கையால் முத்திரை காட்டி உபதேசித்த சமாதி நிலை சேர்ந்து; மோனவாச மலரணை மீது வண்டெனவே துயில்வோர்- மோனம் என்னும் மலர் மஞ்சம்மீது வண்டுபோல் தூங்குவோர்; இல்வாழ்வுற்றாலும், பாசமுறார் - இல்வாழ்க்கையிலிருந்தாலும் பாசத்தில் அழுந்தார்; வரும் பொருள் மேற்போன பொருளுக் கிரங்கிப் பதையார் - வந்தது போனதைப் பற்றிக் கிலேசப்பட்டு நெஞ்சம் பதைப்படையார்; நேசமுறும் பொருள் வெறுக்கார் - நல்வழியில் பொருள்வரினும் அதை வெறுக்க மாட்டார்கள்; நின்மல ஆனந்தம் நிறைந்த மிக்கோர் - நின்மல ஆனந்தத்தில் மிக்க நாட்டமுடையோர் உலக வியாபாரங்களால் பாதிக்கப்பட மாட்டார்கள் என்றபடி.

சுவையினிதோ டுண்டுடுத்திச் சுகந்தமணிந்
தரிவையர்கள் தோளில் சேர்ந்து
குவிமுலையைத் தழுவியணைந் திடுபொழுதும்
இறைசெயலைக் குறிப்பர் வல்லோர்
அவைநடுவே மந்திரத்தோர் அரவதனை
ஆட்டமனம் அஞ்சார் என்ன
நவைபுவியின் மயக்கறிந்து விலைமாத
ரெனப்பொருளை நண்ணு வாரே. 93

சுகந்தம் - வாசனை; அரிவையர் - மங்கையர்; குவிமுலையை ...... இறை செயலைக் குறிப்பர்-நல் மனைவியின் குவிமுலையைத் தழுவி அணையும் போதும் இறைவனிடத்தில் சதா காலம் கொண்ட நினைவால் அச்செயலையும் ஒரு தெய்வக் கிரியை யாகவே பாவிப்பர். (சிவராத்திரி யன்று பரத்தையர் வீட்டுக்குச் சென்ற ஒருவன் முலையையே இலிங்கமாகப் பாவித்து வெற்றிலை யையே வில்வதளமாகப் பாவித்து பூசை செய்து அருள் பெற்ற கதையை ஈண்டு உன்னுக). வல்லோர் அவை நடுவே மந்திரத் தோர் அரவதனையாட்ட மனமஞ்சார் - கவி வல்லோர்கள் நடுவிலும் தமது மந்திரத்தை ஒலிக்க அஞ்சமாட்டார்; அரவு- பாம்பு; நவை புவி - குற்றமுள்ள உலகு.

தனதுடைய கொழுநரொடு கூடியணைந்
திடுபொழுதும் தனது கும்பக்
கனதனத்தை நீவியதோர் பிறபுருடன்
தனையணையக் கருதுவாள் போல்
புனைமணிமே கலைமடவார் போகமதில்
தோல்தோலைப் புல்லச் செய்தது
எனதுடைய பரஞ்சுடரென் றிசைந்துகுரு
பதம்பெறுவோர் இருப்பர் நெஞ்சே. 94

கொழுநர் - கணவர்; நீவிய - தடவிய; (நீவுதல் - தடவுதல்) புனைமணி மேகலை - மணிகள் கோக்கப்பட்ட சீலை. தோல் தோலைப் புல்லச் செய்தது - தோலுடன் தோல் புணரச் செய்தது; பரஞ்சுடரென்றிசைந்து குருபதம் பெறுவோர் இருப்பர்- பரஞ்சுடராகிய குருபாதத்தைத் தலைமிசைப் பெற்றது போலப் பாவித்து நிற்பர்; (எப்படிக் கள்ளக் காதல் கொண்ட ஒரு பெண் கணவனுடன் சேரும் போதும் வேறு புருடனையே நினைவில் வைப்பாளோ, அது போல் நல்ல அடியார்கள் நல்மனைவியுடன் கூடும் போதும் குருவருளையே சிந்திப்பார்).

பூசையெனும் வகைபுரியார் சாதிவரம்
படங்கார்கள் பொருந்தார் நேமம்
தேசமெனும் காலமெனும் பகையுறவென்
றறியாமல் திரிவர் ஆசை
நாசமுற வகையறிவார் சாதிதனில்
பேதங்கள் நாடார் நாளும்
பாசமிலாப் பாலர்பித்தர் பேய்என்த்
திரிவார்கள் பாராய் நெஞ்சே. 95

பூசையெனும் வகைபுரியார் - வெறும் கிருத்தியங்களையே பூசையாகக் கொள்ளார்; சாதி வரம்படங்கார் - சாதிக்கட்டுப் பாடு அறியார்; நேமம் - நியமம்; காலதேசவர்த்தமானத்துக்கு உட்படார்; பகைவுறவென்றறியாமல் - பகைவன், நண்பன் என்ற பேதம் பாராமல்; திரிவர் - எதேச்சையாய் நடமாடுவர்; ஆசை நாசமுற வகையறிவார் - ஆசையை அடக்க வழி நன்குணர்வார்;

சாதிதனில் பேதங்கள் நாடார் -சாதி வேற்றுமைகளை ஆராய்ந்து பார்க்கமாட்டார்கள்; நாளும் எப்போதும்; பாசமிலா - கபடமில்லாத; பாலர், பித்தர், பேயர் எனத்திரிவார் - குழந்தை உன்மத்தர், பேயர் போல் திரிவார்.

எந்தனுடைச் சொந்தமிதென் றிரங்கார்கள்
யான்எனதென் றிசையார் எண்ணார்
பந்தமற்று நின்மலமாய்த் துக்கசுகம்
ஒருவழியாய்ப் பார்ப்பர் பொங்கி
வந்தொருவன் தகர்த்தாலும் இறைசெயலைக்
குறிப்பதல்லால் வாய்பேசார்கள்
சிந்தையற வேதாந்தச் சித்தாந்த
சமமோனந் தெரிந்த மிக்கோர். 96

எந்தனுடைச் ......... இரங்கார்கள் எனது உறவு என்று ஆசை வைக்கார்; யான்எனதென் றிசையார், எண்ணார் - யான் எனது என்ற சங்கல்பத்துக்கு உடன்படார்; துக்க சுகமொரு வழியாய்ப் பார்ப்பர் - இருவினையொப்பு என்ற நிலையில் இருப்பர்; பொங்கிவந்தொருவன் ......... இறைசெயலைக் குறிப்பதல்லால் வாய்பேசார் - சீறி ஒருவன் தன்னைப் புடைத்தாலும் சிவன் செயலென்று மவுனமாய் இருப்பர்; சிந்தையற - சித்த விகாரமின்றி; வேதாந்த சித்தாந்த சமமோனம் தெரிந்த மிக்கோர்-வேதாந்த சித்தாந்தங்களின் எல்லை மோனம் என்று தெளிந்த பெரியோர்கள்.

ஞாலமொடு புனல் கனல்கால் நண்ணரிய
வெளிபூதம் ஐந்தும் நண்பாய்ச்
சீலமுடை யோர்கயவர் அரசர்எளி
யோர்வலியர் தீமை நன்மை
சாலதனித் தனிப்பிரித்துப் பேதகமாய்ச்
சாராமல் சமம தாம்போல்
மாலறவே இறையாட்டுஞ் செயலெனவே
சமம்மேவி வாழ்வர் மிக்கோர். 97

கால்-காற்று; கயவர்-தூர்த்தர்; சால-மிகவும்; தனித் தனிப் பிரித்துப் பேதகமாய்ச் சாராமல் -த்வைத பாவத்தை நீங்கி; சம மதாம் - சமம் அது ஆம், எல்லாம் ஒன்று என்ற பாவனை; மாலறவே - மயக்கமின்றி; இறையாட்டுஞ் செயல் - தெய்வச் செயல் 'ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே' - தேவாரம்; சமமேவி-சம பாவம் நிலைக்கப்பெற்று.

காசினியோர் எதுநிசமென்று ரைத்தாலும்
அதுநிசமே கருதும் என்று
பேசியடங் குவதல்லால் வேறொன்றால்
வாதுமொழி பேசார் போதும்
வாசனையும் கலந்ததென உயிர்தோறும்
இறைகலந்த வளமை பார்க்கும்
நேசர்குரு பரந்தனக்கும் பேதமிலா
தொன்றாக நிற்கும் அன்றே. 98

காசினியோர்......... வாதுமொழி பேசார் - மோன எல்லை அறிந்தவர்கள் உலகினர் எது கூறினும் சரி என்று கூறி வாதாடிக் காலங்கழிக்க மாட்டார்; போதும் வாசனையுங் கலந்ததென-பூவும் மணமும் பிரிக்க முடியாமலிருப்பது போல்; உயிர்தோறும் இறைகலந்த வளமை-எவ்வுயிரிலும் இறைவன் கலந்துள்ள திருவருட்டிறத்தினை; குருபரந்தனக்கும் பேதமிலா தொன்றாக நிற்கும் - குரபரனுடனும் ஒட்டி வாழ்ந்து உய்வடையும்.

இந்திரியச் சேட்டைகெட மனமடக்கிக்
குருநாதன் இசைந்த மோன
மந்திரத்தின் நிலைநாடிச் சகம்பாவைக்
கூத்தெனவே மதிப்பர் என்னச்
சிந்தையுற்ற நெஞ்சியம்பும் பாவைக்கூத்
தெனவுரைத்தீர் தெரிய விந்த
விந்தைதனை விவரமதாய் விளம்பீர்என்
றிடஅறிவும் விளம்ப லுற்றாம், 99

இசைந்த-சொன்ன; மோனமந்திரத்தின் நிலைநாடி-அசபா மந்திரத்தின் நிலையைத் தேடி; சகம்பாவைக் கூத்தெனவே- உலகானது பொம்மலாட்டமெனவே; சிந்தையுற்ற நெஞ்சு இயம்பும்-சிந்திக்கா நின்ற நெஞ்சு கேட்கும்; விந்தை - விசித்திரம்.

ஆனந்தச் சின்மயமாய் அமர்ந்திருக்கும்
கூத்தில் வல்லன் அகிலந் தன்னில்
ஊன்உந்திப் புழுத்துடிக்கும் உடற்பாவைக்
குகுந்துவளிக் கயிறு பூட்டி
மோனந்த மெனுந்தீபம் ஏற்றி அகந்
தனில் நினைப்புத் திரையால் மூடி
ஆனந்த மாகியநம் இறையுவந்தே
ஆட்டி வைக்கும் வளமை நெஞ்சே. 100

ஆனந்தச் சின்மயமாயமர்ந்திருக்கும் கூத்தில் வல்லன்- சின்மயனந்தமாய் நிர்த்தமிடும் கடவுள்; அகிலந் தன்னில் ஊனுந்திப் புழுத்துடிக்கும் உடற்பாவைக்குகந்து - உலகில் இறங்கி ஊன்புக்கு உடலிடங்கொண்டு பாவைக் கூத்தாட்ட மகிழ்ந்து; வளிக்கயிறு பூட்டி-காற்று என்ற கயிற்றால் கட்டி; மோனந்தம் எனும் தீபமேற்றி - மோனத்தின் அந்தத்தில் ஞானச்சுடர் விட்டெரியப் பெற்று; அகந்தனில் - சித்தத்தில்; நினைப்புத்திரையால் மூடி - மந்திர நினைப்பால் மூடி; ஆனந்த மாகிய நம்மிறை - ஆனந்த சொரூபியான நம் கடவுள்; உவந்தே ஆட்டிவைக்கும்-நேயத்தோடு ஆட்டிவைக்கும்; வளமை நெஞ்சே- வளத்தை நாடும் நெஞ்சே.

வஞ்சமற உரைத்தீர்நம் இறைஇருந்தே
ஆட்டுமிடம் வழங்காய் என்ற
நெஞ்சமதற் கறிவுரைக்கும் தாவரத்தும்
சங்கமத்தும் நிறைந்த பூதம்
அஞ்சினுக்கும் அகம்புறமாய் உயிர்க்குயிராய்ப்
பூரணமாய் அமர்ந்த தென்ன
மிஞ்சிகணக் கற்றசரம் அசரமன்றோ
என அறிவு விளம்ப லுற்றாம். 101

நம் இறை இருந்து ஆட்டுமிடம் வழங்காய் - இறைவன் அந்தரியாமியாக இருந்து ஆட்டுவிக்கும் இடத்தைச் செப்பாய் என்று கேட்ட நெஞ்சுக்கு அறிவு சொல்லும்; தாவரத்தும்........ நிறைந்து - சராசரங்களில் நிறைந்து; பூதம் அஞ்சினுக்கும் அகம்புறமாய் - ஐம்பூதங்கட்கும் உள்ளும் புறமுமாய், உயிர்க் குயிராய்-உடலுக்கு உயிர்போல் உயிர்க்கு உள்ளுயிராய்; பூரண மாய்-எங்கும் வியாபியாய்; அமர்ந்ததென்ன - அதாவது ஓரிடத் திலாவது எங்கும் பிரகாசமாய் அமரும் என அறிவு கூறும்; சரம் அசரம்-இயங்கு பொருளும், நிலைப்பொருளும்.

பெருவெளிக்குள் அண்டமெலாம் கலந்ததுபோ
லும்பேத மான மெய்யாம்
உருவெழுத்துக் குயிராகக் கலந்துதனித்(து)
அகரமொன்றே உறையு மாபோல்
மருவியுயிர்க் குயிராகிக் கலந்து தனித்
தொன்றாக வயங்கும் என்னக்
குருவருளால் அறிவுரைக்க நெஞ்சமது
வினவியசொல் கூற லுற்றாம். 102

பெருவெளிக்குள் - பெருவியோமத்தில் அண்டங்கள் அடங்கி நிற்றல்போல்; பேதமான மெய்யாம்...உறையுமா போல் வெவ்வேறான மெய் எழுத்துகட்கு உயிராய்க் கலந்தும் தனி யாகவும் நிற்கும் 'அ'கரம் ஒன்றே இயங்குமாபோல்; மருவி யுயிர்க்கு...வயங்கும் என்ன-எல்லா உயிர்க்கும் உயிராய் இயங்கும் என்ன; குருவருளை...கூறலுற்றாம்-நெஞ்சம் கேட்ட வினாவுக்குக் குருவருளால் அறிவு இவ்வாறு கூறலாயிற்று.

உடலுறையும் உயிர்கள்தொறும் பாஞ்சுடரே
உறைந்திருப்ப துண்மை யாகின்
துடரறவே ஒருவிதமாய் வாழாமல்
அலைந்தவகை சொல்லாய் என்னக்
கடற்புவியில் ஆடுகின்ற பாவையெலாம்
அரசனெனக் காட்டி நிற்கின்
திடப்படுமோ ஆகையினால் புலவிதமாய்
ஆட்டிவைக்குஞ் செய்கை நெஞ்சே. 103

துடர் அறவே-தொடராமல்; ஒருவிதமாய் வாழாமல்-எல்லா உயிரும் ஒரேவிதமாய் இன்ப துன்பங்களை அனுபவியாமல்; கடற்புவி-கடல் சூழ்ந்த பூமி; ஆடுகின்ற பாவையெலாம்-அரசன் ஆணைக்கு அடங்கிப் பொம்மைபோல் தொழில் புரியும் எல்லோரும் அரசனாவரோ? திடப்படுமோ - உண்மையாகுமா? பலவிதமான ஆட்டிவைக்கும் கர்மத்திற் கேற்றபடி இறைவன் ஆட்டிவைப்பன் என்றபடி.

துக்கசுகம் என்பவைகள் அனுபவிக்க
வைத்தவிதும் சொல்லாய் என்ன
மிக்க தெளிந் தறிவுரைக்கும் கற்பனைய
லாதுசுக துக்கம் ஏது
தக்கபுகழ் வேந்தனென வேடமுற்றோன்
பொய்ச்சுகமும் தளர்ந்து மெத்தத்
துக்கமுறு வேடமுற்றோன் பொய்த்தளர்வும்
ஆம்சகத்தின் தொல்லை நெஞ்சே. 104

கற்பனையலாது சுக துக்கம் ஏது-சுக துக்கம் உயிரைப்பாதிக் காது; தன் முனைப்பு என்ற ஆணவம்தான் சுக துக்கங்களை வினைப்பயனால் நுகரும். நுகர்வது உயிரல்ல வென்ற உண்மை கண்டபின் வினைப்பயன் வலியற்றுப்போம். தக்கபுகழ்... தளர்வுமாம்-ஒரு நாடகத்தில் வேந்தன் வேடம் போட்டவன் சுகம் அடைவது போலவும், துக்கமடைந்த ஒருவன் வேடம் போட்டவன் தளர்வடைந்ததுபோலவும் பொய்யாக தோன்று கிறதோ, அதுபோல் வினைப்பயன் உயிரைப் பற்றாது சகத்தின் தொல்லை-உலக சம்பந்தத்தினாலுண்டாள (மாயா சம்பந்தம்) தொல்லைகளாகும். சகல நிலையென்பது இது. கேவல நிலையில் உயிர்க்கு ஒருவிதமான அனுபவமும் கிடையாது. காரியம் காரணத் தில் அடங்கி நிற்கும்.

கண்ணினுரு வாய் அதற்கும் உள்ளொளியாய்க்
கலந்திருந்தும் கண்ணாற் காணும்
எண்ணரிய உருவாகி அருவாகிப்
பலவாகி ஏக மாகிப்
புண்ணியபா வங்களுமாய்ப் புரிபவனாய்ச்
சுகதுக்கப் பொலிவாய் நித்தம்
மண்ணிலதை யடைந்தவனாய் இறையிருந்து
விளங்கியமெய் வள்ங்காண் நெஞ்சே 105

கண்ணினுருவாய் ... உள்ளொளியாய்க் கலந்திருந்தும் - உயிரென்னும் சித்துப் பொருள் கண்ணெனும் பொறியோடு ஒன்றுபடின் காணும் என்றபடி; அருவாகி-உருவல்லாதது; புண்ணிய பாவங்களுமாகிப் புரிபவனாய்-இறைவன் ஆஞ்ஞா சத்தியால் புண்ணிய பாவங்களின் பயனை உயிர்க்குப் புரிந்து; பொலிவாய்-விளைவாய்; இறை இருந்து விளங்கிய மெய் வளங்காண்-இறைவன் ஒன்றாயும் வேறாயும் உடனாயும் இருந்து அருள் புரியும் வள்ளல் தன்மையைக் காண்.

(இப்பாட்டின் கருத்து சிவஞானபோத சூத்திரத்தின் பிழிவாய்க் காணப்படுவதை உன்னுக).

தினந்தினம்இவ் வுயிரனைத்தும் செய்யுஞ்செயலெ
லாம்இறையின் செயலென் றீர்ஓர்
நினைவுறவே நினைந்திடவும் செயல்இலையோ
எனஅறிவு நிகழ்த்தும் சோதித்
தனிப்பரமாம் இறையாட்டும் செயலன்றி
உடல்நடக்கத் தகுமோ மெத்த
இனித்தமொழி தசைநாவும் இயம்பிடுமோ
எனின்நினைப்ப தெதுவாம் நெஞ்சே. 106

தினந்தினம் ... செயல்இலையோ - உயிர் செய்யும் சொல்லெலாம் இறைவன் ஆஞ்ஞா சத்தியால் நிகழும் என்று சொன்னீர், அப்படியாகில் உயிர்க்கு நினைப்பு என்ற செயல் கூட இல்லையா? அறிவு நிகழ்த்தும்-அறிவு கூறும்; தனிப்பரமாம் இறையாட்டும் செயலன்றி உடல் நடக்கத்தகுமோ - சடமான உடல் இறைவன் சித்துப் பொருளாய் ஆஞ்ஞா பிடித்தப்படியன்றி வேறு வகையால் நடக்கத் தகுமோ? இனித்த மொழி ... இயம்பிடுமோ-தசையான நாவானது வேறு சக்தியின்றி நல்ல மொழியைப்பேச சக்தியுண்டோ? என நினைப்பது எதுவாம் நெஞ்சே-எனவே நினைப்பு சக்திகூட இறைவன் தந்த சக்தியே ஆகும்.

நினைப்பதுவும் மறப்பதுவும் சித்தமதை
மயக்குவதும் நேராய்ச் செய்து
தனித்திருக்கச் செய்வதுவும் தொந்தமொடு
நிர்த்தொந்தத் தர்க்கம் எல்லாம்
சினத்துடனே வளர்ப்பதுவும் திரமுறவே
துடைப்பதுவும் தேச தான
கனச்சுடர்என் றால்நினைக்க மறக்கசெயல்
இனிஏது காணாய் நெஞ்சே. 107

நேராய்ச் செய்து-சித்தத்தை நேராக (ஓர் முகமாக) செய்து; தனித்திருக்க-நிட்டைகூட; தொந்தமொடு நிர்த்தொந்தத் தர்க்கமெல்லாம்-இரண்டு அல்லது இரண்டல்ல என்ற வாதுகளெல்லாம்; சினத்துடனே வளர்ப்பதுவும் - ஆவேசத்துடனே பெருக்குவதும்; திரமுறவே துடைப்பதுவும் - சாமர்த்தியமாக அழிப்பதுவும்; தேசதான கனச்சுடர் என்றால்-தேசோமயமான அழகிய 'சித்' என்னும் ஒளி என்றால்; நினைக்க மறக்க செயல் இனி ஏது-நினைப்பு மறப்பு என்ற செயல் அடங்கும்.

மனமேநற் சின்மயத்தில் ஆசைவரு
வித்துகுரு வடிவாய் வந்து
கனவெளியில் தங்கிவொரு நிலைகாட்டி
அந்நிலையில் கருதொண் ணாத
தனிச்சுடராய் வெளிகாட்டித் தனியுணர்ந்த
ஆனந்தத் தவனும் ஆகி
வனமுலைமா தொடுமயங்கு பவனும்இறை
யாய்ப்புவியில் வயங்கும் அன்றே. 108

சின்மயத்தில்-சுத்த சித் பொருளாகிய இறைவனிடத்தில் அன்பு நாட்டி; கனவெளியில்-பரவெளியில்; நிலைகாட்டி-தத்துவ நிலைகாட்டி; கருதொண்ணாத-கருதரிய; தனிச்சுடராய் வெளிக்காட்டி - 'தகரம்' என்ற சிதாகாசத்தில் தனிச் சோதியாய் விளங்கி; தனியுணர்ந்த ஆனந்தத்து அவனும் ஆகி-சுத்த நிலையில் அவனே ஆனந்த மயமாகி; வனமுலை மாதொடு-உமையொரு பாகனாய் (அருள்நிலை); மயங்குபவனும்-கலந்து நிற்பவனும்; இறையாய்ப் புவியில் வயங்கும் அன்றே-நிறைந்த சித் பொருளாய்ப் பிரகாசிக்கும்.

ஆட்டிவைக்கு மவனாகி ஆடுவனாய்,
ஆட்டமதை அன்பாய் நின்று
காட்டுபவ னாய் அதனைக் காண்பவனாய்த்
துரியநிறை கடவு ளாகி
வாட்டமிலாக் களிப்பாகி நினைப்பாகிச்
சொந்தமென்ற வாஞ்சை யாகிக்
கூட்டமொடு கூடாத இறையிருக்க
நினைப்பேது கூறாய் நெஞ்சே. 109

ஆட்டிவைக்குமவனாகி-சராசரங்களை ஆட்டி வைப்பவனாய்; ஆடுவானாய்-பஞ்சகிருத்த தாண்டவம் புரிபவனாய்; ஆட்டமதை அன்பாய் நின்று காட்டுபவனாய்-அதை இறைவன் காட்ட உயிர் உணர; அதனைக் காண்பவனாய்-அதையும் தானே காண்பவனாய்; துரிய நிறை கடவுளாகி-துரியத்தில் நிறைந்த கடவுளாகி; வாட்டமிலாக் களிப்பாகி-குறைவு படாத இன்பமாகி; சொந்தமென்ற வாஞ்சையாகி-அனன்னியம் என்ற உணர்வு பெருகி; கூட்டமொடு கூடாதாய்-தத்துவ ரகிதனாய் இருக்க; நினைப்பேது நெஞ்சே-நெஞ்சே நினைப்பேது மறப்பு ஏது (நினைவற நினைந்த நிலை, அபேத நிலை, இராப்பகலற்ற நிலை, மாறிலா நிலை எனப் பேசப்படும் சுத்த நிலையாகும்).

இந்தமொழி யுணர்ந்தோர்கள் உலகில் உயிர்க்
குயிராகி உறைந்தே ஓங்கும்,
பந்தமற்ற பரஞ்சுடரின் செயலாகி
எங்கெங்கும் பார்க்குந் தோறும்
எந்தவிதம் எவ்விடமும் பரஞ்சுடரின்
இயல்பாக இருப்ப தாலே
சிந்தையற்றார் பேசவே றொருவரிலா
தான்மோனம் சிறந்தார் நெஞ்சே. 110

இந்த மொழி உணர்ந்தோர்கள்-இந்த உண்மையை உணர்ந்தவர்கள் (குருவருளால் உணர்ந்தவர்கள்); பந்தமற்ற பரஞ்சுடரின் செயலாகி-தன் செயலெல்லாம் சிவன் செயலேயாகி; எந்தவிதம் எவ்விடமும் பரஞ்சுடரின் இயல்பாக இருப்பதாலே-எல்லாம் சிவபரமாக இருக்க; சிந்தையற்றார் ... வேறொருவரிலாதால்-பரத்தில் பரர் மறைந்ததால்; மோனஞ்சிறந்தார்-மோனத்தில் இன்பமடைவர்,

உலகில்பரி பூரணமே தானாகி
ஆட்டிவைத்தே உருவாய் ஆடி
இலகிபுவி நிறைந்ததென நெஞ்சுரைக்கும்
என்செயலுக் கிசைந்த தெல்லாம்
சொலவரிய இறைஇயற்றுஞ் செயல்என்றீர்
என அறிவு சுழுத்தி தன்னில்
அலமிகுத்த கரணமொடு பொறிபுலனோ
டுன்செயலை அறிந்தி லாயோ. 111

பரிபூரணமே தானாகி ஆட்டி வைத்து உருவாய் ஆடி-சுத்த சிவமானது தனது மாயா சக்தியால் உலகில் பல்வேறு வடிவாய் இருந்து. (இலகி-'இலங்கி' இடைக்குறை); அறிவு சுழுத்திதன்னில் ........ அறிந்திலாயோ - அறிவானது சுழுத்தி (மயக்கமான நித்திரை) அவத்தையில் விசாலமான அந்தக் கரணங்களுடன் பொறி புலன்கள் என்ன செய்கின்றன என்பதை அறியாயோ?

யான்எனதென் செயலெனவே மயக்கமுற்ற
தால்அண்ட புவனம் எல்லாம்
தானேயாய்ச் சரம்அசரம் தானாம்சிற்
செயன்மறந்து சலித்தாய் ஈங்கு
நானேயென் றிடுமொழிக்கே யுரித்தாரா
குவர்ஆய்ந்து நவிலு கென்ன
வானோடைம் பூதமுமாம் சகமியான்அன்
றெனநெஞ்சம் வழங்க லுற்றாம். 112

யானெனதென் செயலெனவே மயக்கமுற்றதால் - யான் எனது என்ற மயக்கத்தால்: புவனமெல்லாம் தானேயாய்ச்சரம் அசரம் தானாம் செயல் மறந்து சலித்தாய் - இறைவன் தானே சராசரங்களில் தங்கிச் செயலாற்றுவதை மறந்து சலிப்படைந் தாய்; நானே என்றிடு மொழிக்கே உரித்து ஆர் ஆகுவர் ஆய்ந்து நவிலுக என்ன-நான் என்றதற்கு யார் அதிகாரி என்று ஆராய்ந்து சொல் என்று கேட்க: வானோடு ஐம்பூதமுமாம் சகம் யான் அன்று என நெஞ்சம் வழங்கும்- ஐம்பூதமான உலகம் நான் அல்ல வென்று நெஞ்சம் சொல்லும்.

மாசறுவெள் ளென்புதசை தோல்குருதி
நிணம்பொதிந்த மலச லாதி
நேசமுறும் உடற்பாவை நான் அல்ல
வாசிகயி றல்ல நேரே
ஆசைதரு மனம்புந்தி அகங்காரா
ணவதிரைநான் அல்ல மேலாம்
தேசுபெருஞ் சின்மோனச் செழுஞ்சுடரே
யான் என்று சிறந்த தம்மா. 113

நேசமுறு உடற்பாவை-பற்று வைக்கப்படும் உடல் என்ற பொம்மை; வாசி-காற்று; ஆசைதரும்-பற்று உண்டாகும்: மனம், புத்தி, அகங்கார ஆணவ திரை-மனம் புத்தி அகங்காரம் என்ற ஆணவத் திரை; (பொம்மலாட்டத்தில் உடல் பொம்மை, மூச்சு சூத்திரம், மன முதலாயின திரை); திரை-கடல் அலை என்றும் கொள்ளலாம். சித்தம் சிந்திக்கும் (நிச்சயிக்கும்), மனம் பந்திக்கும், ஆங்காரம் தெளியும், புத்தி ஆய்வுசெய்யும். நான் அல்ல-நான் அல்ல என உணர்ந்து: தேசு பெரும் சின்மோனச் செழுஞ்சுடரே யான் என்று சிறந்த தம்மா-தேசோமயமான சுத்தசைதன்யமான மவுனம் என்ற சுடர் ஒளியே யான் என்று தெளிந்தது அம்மா!

வீரியமாய்ப் பகைஉறவு விளைப்பதுவும்
உண்டுடுத்து வேட்கை யாக
நாரியரை நயப்பதுவும் நற்றவங்கள்
புரிவதுவும் நாம ரூபப்
பேருலகாய் உடல் உயிராய்ப் பேதமெனக்
காண்பதெல்லாம் பிரமா னந்த
வாரியெனும் இறைசெயலென் றுணர்வதும்
அதுவாக வயங்கிற் றம்மா. 114

வீரியமாய்-வீரமாய்; நாரியரை - பெண்டிரை; நயப்பதுவும்-ஆசைப்படுவதும்; நாமரூபப் பேருலகம் - நாமரூபங்களால் உலகம் பரந்து வெவ்வேறாய்த் தோன்றலும்; உடல் உயிராய் - உடல் உயிர் வேறுபாடாய்; பேதமெனக் காண்பதெல்லாம்-வெவ்வேறாய் காண்பதெல்லாம்: பிரமானந்தவாரி எனும் இறை செயல் - இறைவன் திருவிளையாட்டால் பலவாகி பொங்கிக் காணும்; உணர்வதும் அதுவாக வயங்கிற்றம்மா-அந்த உணர்வும் இறைவன் திருவிளையாட்டின் பொலிவு: இதன்-பொருள் அறிவாய், நெஞ்சே!

சின்மய தீபிகை மூலமும் உரையும்
முற்றிற்று.



## செய்யுள் முதற்குறிப்பு அகராதி

## திருமுதுகுன்றச் சிறப்பு

**கந்தபுராணம்**

தூசினால் அம்மைவீசி தொடையின் மேல் கிடத்தித் துஞ்சும்
மாசிலா உயிர்கட்கு எல்லாம் அஞ்செழுத்து இயல்பு கூறி
ஈசனும் தனது கோலம் இயன்றிடும் இயல்பால் அந்த
காசியின் முழுமைத்தான முதுகுன்ற வரையும் கண்டாய்.



கஜேந்திரா அச்சுக்கூடம், சிதம்பரம். தொலைபேசி: 22910